குரு பெயர்ச்சிப் பலன்கள்

குடும்பத்துடன் களிக்க...

# கல்கி

KALKI
18.9.2005 ரூ.7.00
96 பக்கங்கள்

புத்தகத்தின் பின்னணியில்...



அழகிய தீயே!


உண்மை உழைப்பு உயர்வு
கண்கவர்
டிசைனர்
சாரீஸ்
கலெக்ஷன்
நுண்ணிய வேலைப்பாடுகள்
அமைந்த டிசைனர் சேலைகள்
உங்கள் உள்ளத்தைக் கவர்ந்து
வாங்க வைத்துவிடும்.
விலையோ நீங்கள்
நினைக்கும் விலையில்.



# முதல் விருது!

ஐன்ஸ்டீன் போலத் தோற்றம். அவரைப் போலவே இவரது சினிமா தியரியும் விசேஷமானது. கல்லாப் பெட்டிக்குள் பணத்தை மட்டுமே நிரப்பும் சினிமா வியாபாரி அல்ல இவர். வாழ்வின் வலிகளை, யதார்த்தங்களை அப்படியே கண்ணாடிபோல் திரையில் பதிவு செய்யும் வித்தகர். நகைச்சுவைக் காட்சிகளில்கூட நூலிழையில் சோகம் அப்பிக் கொண்டிருக்கும்.

சத்யஜித்ரேவுக்குப் பிறகு மிகச் சிறந்த இயக்குனராக, கலைஞனாக போற்றப்படுபவர் அடூர் கோபாலகிருஷ்ணன். இப்பொழுது இந்தியத் திரையுலகின் உயரிய விருதான தாதாசாகேப் பால்கே விருது, கேரளாவிலேயே முதல் முறையாக இவருக்கு வழங்கப்பட்டுள்ளது. விருதுகளும் புகழ் மாலைகளும் அடூருக்கு ஆனந்த அதிர்ச்சிகள் கிடையாது. சிறந்த தேசிய இயக்குனருக்கான விருதை நான்கு முறையும், கதாசிரியருக்கான விருதை மூன்று முறையும் வாங்கிக் குவித்துள்ளார். இது தவிர, முதல் படமான 'ஸ்வயம்வரம்' முதல், சமீபத்திய 'நிழல்குத்து' வரை அத்தனை படங்களும் சர்வதேசப் பட விழாக்களில் போட்டியிட்டு, சிறந்த படங்களுக்கான விருதைத் தட்டிச் சென்றுள்ளன.





இவருக்குச் சில விஷயங்களில் பிடிவாதங்கள் அதிகம். "கலாசாரத்தின் வேர்களை, யதார்த்த நிலையைச் சொல்வதுதான் சினிமா. கேமரா கோணங்கள் உட்பட அனைத்துத் தொழில் நுட்பங்களும் ஓர் இயக்குனருக்குத் தெரிந்திருக்க வேண்டும். ஒரு ரசிகன் படத்தைப் பற்றிய கருத்தைக் கூறலாம். விமர்சகனே விமர்சிக்கத் தகுதியானவன். ஒரு யூனிட்டில் இயக்குனருக்கே அதிகச் சம்பளம்" என்று தன் நிலைப்பாடுகளில் எப்பொழுதும் உறுதியாக இருப்பவர்.





"ஒரு படம் முடித்துவிட்டு உடனடியாக அடுத்த பட வேலைகளில் இறங்கிவிட மாட்டேன். என் படங்களை உலகமெல்லாம் திரையிடுவேன். அது பற்றிய கூட்டங்களில் கலந்துகொண்டு என் படத்தின் மீதான விமர்சனங்களையும் கேள்விகளையும் எதிர்கொள்வேன். இப்படியே இரண்டு வருடங்கள் ஓடிவிடும்" என்றபடி தன் கூந்தலை வருடிக் கொள்கிறார் இந்த ஜீனியஸ்.



- நீலாவள்ளி

வட்டமேஜை

# பிடிங்க லட்டு!



**ச**ந்தர்ப்ப நாடகமாடும் பி.ஜே.பி.யின் இன்றைய நிலைமையைச் சுருட்டிக் காட்டிய 'சூரானா' தலையங்கம் ஜோர்.

**- கண்ணன், நெய்வேலி.**

'**இ**ளமை கல்கி'யின் 'க்ளோஸ்' பதி படித்து வயிறு 'க்ளோஸ்'!

**- ராமு அர்விந்த், கோவை.**

**தே**வவிரதனின் 'வீடு' சிறுகதை நெஞ்சில் சிலிர்ப்பை ஏற்படுத்தியது.

**- பரமசிவம், புனலூர்**

'**மு**யற்சி செய்யும்போது தோல்வியும் சகஜம்தானே' எனக் கூறும் ராதாரவியின் அடக்கம் அருமை!

**- தர்மன், சென்னை.**

**அ**மரர் கல்கியின் 'முந்திரிக் கொட்டை', அறிமுக எழுத்தாளர்களின் மனத்தைப் பிரதிபலித்தது.

**- ஸ்ரீனிவாசன், புழுதிவாக்கம்**

**கோ**யம்பேடு ஒற்றனின் விசிட், அங்கு நடைபெறும் கோல்மால்களின் கொஞ்சம் போல சாம்பிள்கள்தான்!

**- ராமதாஸ், ஆடுதுறை**

**செ**ன்னையைச் சேர்ந்த பெண்மணி, ஒரு கிராம முன்னேற்றத்திற்காகப் பாடுபடுவது பாராட்டத்தக்கது.

**- கோவர்த்தனம், வேளச்சேரி.**

'**ம**கிழ்ச்சி என்பது மனதுக்குள்ளே இருக்கிறது. விலை கொடுத்து வாங்க

## வாரம் ஒரு வாசகர்

**க**லைஞரின் உடன்பிறப்புதான் நானும். ஆனாலும் பரமு அவரிடம் கேட்ட கேள்விகளைப் படித்து ரசித்தேன்... சிரித்தேன்.

**- ப. மூர்த்தி, பெங்களூர்**



முடியாது' என்பதை சுனந்தாஜி இனங் காட்டி விட்டார்!

- தீத்தாரப்பன், தென்காசி.

'பொன்னியின் செல்வன்' விமர்சனம் நன்றாக எழுதப்பட்டிருந்தது.

- சாந்தி சுந்தர், நெய்வேலி.

'திருப்பதியை வாழ்த்திய திருமலை'யைப் படித்து சிலிர்த்தேன். பிடிங்க லட்டு!

- ஜோதிகுமார், அரும்பாக்கம்.

'தப்பில்லை ஆனால்' சிறுகதையில் அழுத்தம் அதிகம்.

- வஸந்தா பரமசிவம், மதுரை

ஜே.எஸ். ராகவனின் 'உஷ்... அழாதே..' படித்துச் சிரித்து, வயிறு வலித்தது.

- ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.

மூளை நரம்பியல் ஆராய்ச்சித் தகவல்களுடன் மருத்துவப் பகுதி, சரியான வழிகாட்டி.

- லெமூரியன், திருவண்ணாமலை.

'கலைச்சேவை செய்ய வரவில்லை' என்று பகிரங்கமாக நடிகைகள் ஒப்புக் கொள்வதை மனம் திறந்து பாராட்டலாம்.

- பாலகிருஷ்ணன், மதுரை

'பரிசு பெற்ற பஞ்சாயத்துத் தலைவி' கட்டுரை விஷயம், ஒவ்வொரு பஞ்சாயத்தாலும் பின்பற்றப்பட வேண்டியவை.

- ரங்கநாதன், சென்னை.

விளையாட்டாகப் பயன்படுத்தும் போதை மருந்துகளின் பின்விளைவுகள் அதிர்ச்சியடைய வைத்தது.

- அசாருதீன், பள்ளிப்பட்டு.

தீவிரவாதிகள் தொடர்பான ஜார்ஜ் புஷ்ஷின் கொக்கரிப்புக்கு, தராசார் காரணங்களோடு அளித்துள்ள பதில் நச்!

- கே.என். பாலகிருஷ்ணன், கும்பகோணம்.




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.390/-
ஆறு மாதம் : ரூ.195/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 63.50 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2060/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு



# கணக்கா? ஆமணக்கா?

பூனைக்கு மணி கட்ட எல்லோருமே தயார். அதுவும் பத்து வருடங்களாக! ஆனால் பூனையின் கழுத்தில் இன்னமும் மணி கட்டப்பட வில்லை. இதுதான் அரசியலில் மகளிருக்கான இட ஒதுக்கீடு மசோதாவின் நிலை.

இந்த 33 சதவிகித மகளிர் ஒதுக்கீடு அவசியமா? இதனால் என்ன பயன் விளைந்துவிடும்? என்பது போன்ற கேள்விகளுடன், சில பிரபலங்களைச் சந்தித்தோம்.

"33 சதவிகித ஒதுக்கீடு என்பது, ஏதோ இங்குள்ள அரசியல்வாதிகள் முடிவெடுத்தது அல்ல. பல வருடங்களுக்கு முன் - சுமார் இருபது வருடங்கள் என்று நினைவு, ஐ.நா. சபை நடத்திய பெய்ஜிங் மாநாட்டில் முன் வைத்த கருத்து இது. ஆணுக்கு நிகர் பெண் என்கிறோம். ஐம்பது சதவிகிதம் வேண்டாம், மூன்றில் ஒரு பங்குகூட இட ஒதுக்கீடு இல்லையென்றால் எப்படி?" என்று கேட்டார் எழுத்தாளர் வாசந்தி.

அ.தி.மு.க பாராளுமன்ற உறுப்பினர் டாக்டர் மைத்ரேயனும் "சமுதாயத்தில் சரி பாதியாக இருக்கும் மகளிருக்கு அரசியல் பதவிகளில் இட ஒதுக்கீடு என்பது அவசியம் மட்டுமல்ல, கட்டாயமாகச் செயல்படுத்த வேண்டிய ஒன்றும்கூட" என்றார்.

இந்தியாவில் பாதிக்குப் பாதி பெண்கள் என்றால், ஒதுக்கீடு எதற்காக? இயல்பாகவே அவர்கள் அரசியலில் அதிக அளவில் பங்கு பெற்றிருக்கலாமே?

"அதையேதான் நாங்களும் சொல்கிறோம். சுதந்திரம் பெற்ற இத்தனை வருடங்களில், பெண்கள் இயல்பாகவே அதிக அளவில் வந்திருக்க வேண்டும். அப்படி இல்லாததினால் இட ஒதுக்கீடு மூலமாகவாவது அதைச் செய்ய வேண்டியது அவசியம்" என்கிறார் அகில இந்திய ஜன நாயக மகளிர் சங்கத்தின் தமிழ்நாடு பொதுச்செயலாளர், வாசுகி.

பல பெரிய கட்சிகளும் இந்த இட ஒதுக்கீடுக்கு ஒப்புக் கொள்கின்றன. அப்படியிருந்தும் இது சட்டமாவதில் ஏன் தாமதம்?

"அரசியல் என்பது இங்கு வியாபாரமாகக் கருதப்படுவதால் லாபத்தில் பங்கு போட்டுக் கொண்ட ஆண்கள், அதை விடுவதாயில்லை. சேவையாக மட்டும் இருந்திருந்தால், பெண்களும் வரட்டும் என்று தாராளம் காட்டியிருப்பார்கள்" என்றார் வாசுகி.



• வாசந்தி

"பெண்கள் இட ஒதுக்கீடு என்பது எல்லாம் மேம்போக்கான (காஸ்மெடிக்) மாற்றங்கள். நல்ல ஆண்களே அரசியலுக்கு வரத் தயங்கும்போது, நல்ல பெண்கள் மட்டும்

எப்படி வந்துவிடுவார்கள்? படித்த ஆண்களில்கூட எவ்வளவு பேர் தேர்தலில் நிற்கிறார்கள்? இது மிகவும் குறைவாக இருப்பதற்குக் காரணம் அரசியலில் ஆரோக்கியமான சூழல் இல்லாததுதான். எனவே இப்போதைக்கு அமலாக்கப்பட வேண்டாம்" என்கிறார் பத்திரிகையாளர் குருமூர்த்தி.

''ஆனால் இப்போதைய அரசியலில் ஈடுபடும் பெண்கள், எதற்கெல்லாம் தயாராக இருக்க வேண்டும் தெரியுமா?" என்ற கேள்வியை எழுப்புகிறார் குருமூர்த்தி. 'ராத்திரி பத்துமணிக்கு மேலே வாங்க. கட்சிக்காக நன்கொடை தரேன்' என்கிற அரசியல் போக்குகள் பெண்களுக்கு ஒத்துவருமா? ஏட்டிக்குப் போட்டி என்று எதையும் பேசக்கூடாது. இது பெண்ணுரிமை சார்ந்த பிரச்னை அல்ல. அந்தக் கோணத்தில் இதைப் பார்க்கக்கூடாது. அரசியலின் தரம் சம்பந்தப்பட்ட பிரச்னை இது. முதலில் அரசியலை கண்ணியமானதாக ஆக்கிவிட்டு, பிறகு இது போன்ற மாற்றங்களை அமல்படுத்தலாம்'' என்பது இவர் கருத்து.


* ஞாநி

வருங்காலம் இருக்கட்டும். இப்போது உள்ள பெண் அரசியல்வாதிகள், மகளிர் நலனுக்காக திருப்திகரமாகச் செயல்படுகிறார்களா?


* குருமூர்த்தி

"உள்ளாட்சி அமைப்புகளில் மகளிர் ஒதுக்கீடு சிறப்பாகவே செயல்படுகிறது'' என்ற வாசுகி, கூடவே "சில இடங்களில் இந்தப் பெண்கள் தங்கள் அப்பா அல்லது கணவரால் ஆட்டி வைக்கப்படும் பொம்மைகளாக இருந்தாலும், காலப்போக்கில் இந்தக் குறைகள் நீங்கிவிடும். பஞ்சாயத்துத் தலைவி கூட்டும் கூட்டங்களில் அவர் கணவர் வராமலிருக்க, சம்பந்தப்பட்ட தாசில்தாரோ, பி.டி.ஓவோ தடை விதிக்க வேண்டும்" என்றார்.

"ஆண்கள் மட்டும் என்ன பெரிதாக சுயமாகச் சிந்தித்து நாட்டை முன்னேற்றிவிட்டார்கள்? அவர்களும் தங்கள் கட்சித் தலைவருக்குக் கொத்தடிமைகளாகத்தானே இருக்கிறார்கள்" எனும் ஞாநி, ஆண்கள் ஆட்

சிக்கும், பெண்கள் ஆட்சிக்குமிடையே உள்ள ஓர் அடிப்படை வேறுபாட்டினைக் கோடிட்டுக் காட்டினார். "பஞ்சாயத்துத் தலைவிகளாகப் பதவியேற்ற பெண்களில் பலர், தங்கள் பகுதியின் குடிநீர்ப் பிரச்னையைத் தீர்த்து வைத்திருக்கிறார்கள். இப்படி அன்றாட வாழ்க்கைக்குத் தேவைப்படும் பல விஷயங்களை இவர்கள் பெற்றுத் தந்திருக்கிறார்கள். ஆனால் இதேபோன்ற பதவிகளில் உள்ள ஆண்கள், சாலைகள் போடுவது போன்ற (தங்களுக்குத் தனிப்பட்ட ஆதாயமாக அமையக்கூடிய) பணிகளில் தான் ஆர்வம் காட்டி வந்திருக்கிறார்கள்.

தவிர அரசியலில் மைதிலி சிவராமன், பாப்பா உமாநாத் போன்றோரின் முயற்சிகள் மிகவும் குறிப்பிடத்தக்கவை. ஆனால் இதை ஏனோ மீடியா சரியான முறையில் உணர்த்தத் தவறி விட்டது" என ஆதங்கப்பட்டார் ஞாநி.



* மைத்ரேயன்

"பெண்களின் பிரச்னைகள் தீர இட ஒதுக்கீடு ஒரு நுழைவாயில். மற்றபடி இதனால் பெண்கள் நிலையில் பெரும் முன்னேற்றம் ஏற்பட்டுவிடுமா என்பதில் மகளிர் இயக்கங்களுக்கேகூட மாறுபட்ட கருத்துகள் உள்ளன" என்றார் வாசந்தி.

அவர் கூறுவது உண்மைதான் என்பது போல் "பெண்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டால், உடனே எல்லாப் பிரச்னைகளும் தீர்ந்துவிடும் என்ற மாயை எங்களுக்கு இல்லை" என்று ஒப்புக் கொள்ளும் வாசுகி "தேசநலன், பெண்கள் நலன். இரண்டும் ஒன்றோடொன்று இணைந்ததுதானே?" என்கிறார்.

"மகளிருக்கு மட்டுமல்ல, தேசத்துக்கும் இது நல்லதாகவே இருக்கும். இப்போது மகளிர் சுயஉதவிக் குழுக்களையே எடுத்துக் கொள்வோம். அதிகபட்சமாக சில இலட்சங்கள்தான் வங்கிகள் இவற்றுக்குக் கடன் அளிக்கின்றன. இவற்றில் 98 சதவிகிதம் கடன்தொகை, நாணயமாகத் திருப்பி அளிக்கப்பட்டு விடுகிறது. ஆனால் மற்றபடி வங்கிகள் அளிக்கும் கடன்கள், பல இடங்களில் கோடிக்கணக்கில் வாராக் கடன்களாக நிற்கின்றனவே!" என்றார் மைத்ரேயன்.

## "ஜெ. கூறும் இரட்டை உறுப்பினர் பதவி சரியான தீர்வாகாது!"

முதலில் அரசியல் கட்சிகளில் பெண்களுக்கு இட ஒதுக்கீடை நடைமுறைப்படுத்தினால் என்ன? மைத்ரேயன் இதில் உள்ள நடைமுறைச் சிக்கலைக் குறிப்பிட்டார். "234 தொகுதிகளிலும் எங்கள் கட்சி போட்டி இடுகிறது என்று வைத்துக் கொள்வோம். அப்போது அதில் எந்த 78 தொகுதிகளை மகளிருக்கென்று தேர்ந்தெடுப்பது? அந்தத் தொகுதிகளில் பிற கட்சியைச் சேர்ந்த ஆண்கள் நின்று ஒருவேளை ஜெயித்துவிட்டால், அப்போது கட்சி ஒதுக்கீடு என்பது பலனில்லாமல் போய்விடுமே! எனவே 'இவை மகளிருக்கான தொகுதிகள், இங்கு எல்லாக் கட்சிகளுமே பெண் வேட்பாளர்களைத்தான் நிறுத்தலாம்' என்ற நிலை வந்தால்தான் பொருத்தமாக இருக்கும்."

"ஜெயலலிதா கூறும் இரட்டை உறுப்பினர் பதவி என்பதும் சரியான தீர்வாகாது" என்கிறார் ஞாநி. "இருக்கும் பதவிகளைக் குறைக்காமல் மேலும் அதிகரிப்பது என்பது, மொத்தத்தில் பெண்களுக்கான இடங்களின் சதவிகிதத்தை இன்னும் குறைத்துவிடும். தவிர, இதனால் வரிப்பணமும் வீண். ஒரே தொகுதிக்கு இரு எம்.எல்.ஏக்கள் அல்லது எம்.பிக்கள் என்றால், சிக்கல்கள் அதிகமாகும். அதுவும் இருவேறு கட்சிகளைச் சேர்ந்தவர்களாக அவர்கள் அமைந்துவிட்டால், இன்னும் மோசம்!" என்கிறார்.

* வாசுகி



- ஜி.எஸ்.எஸ்




# எம்.ஓ.பி. ஜேர்ஸ்லம்...

"**ம்**ஹூம்... கல்லூரிப் பெண்களுக்கு நாட்டைப் பற்றி என்ன அக்கறை இருக்கு?" என்றெல்லாம் பேசப்படாது. எம்.ஓ.பியில் 'மக்கள் தொடர்பு' படிப்பு படிக்கும் மாணவிகள் கன்னம் சிவந்து விடுவார்கள்.

இவர்களது சிலபஸில் மக்களுக்கு விழிப்புணர்ச்சி ஊட்டுவதற்கென்று ப்ராஜக்ட்களும், அதற்கு மதிப்பெண்களும் உண்டு. சரி, இந்த வருடம் இவர்கள் என்ன செய்தார்கள்? இனிக்க, மணக்க பேச வந்தார் அர்ச்சனா.

"எங்க க்ளாஸ்ல இருக்குற முப்பது பேரை மூணா பிரிச்சுட்டோம். நாங்க பத்துப் பேர் கொண்ட க்ரூப், ஓரல் கேன்சர் பத்தி, பட்டினப்பாக்கத்துல இருக்குற குடிசைப் பகுதி மக்கள்கிட்ட விரிவா எடுத்துச் சொன்னோம். மதுப் பழக்கத்தினாலயும், வெத்தலை போடறதாலயும் ஓரல் கேன்சர் வரும்ங்கிறது நிறையப் பேருக்குத் தெரியலை. இதே மாதிரி பள்ளிகளுக்கும் போனோம். தெரு நாடகங்கள் நடத்தினோம். நடிகர் ஜெயராம் வந்து எங்க நிகழ்ச்சிகள்ல கலந்துக்கிட்டார்'' என்றவரை வாயார வாழ்த்தினோம்.


• பூஜா

டிஸ்லெக்ஷியா (Dyslexia)... ஏதோ காபி டேயில் ஆர்டர் பண்ணும் ஒருவித காபியின் பெயர் போலிருக்கிறதா?

அதான் இல்லை. இது மந்தமான குழந்தைகளிடையே உருவாகும் நோய்.

"நாங்க சர்வே எடுத்ததுல படிச்சவங்களுக்குக் கூட இந்த நோய் பத்தித் தெரியல. பார்க்க சாதாரணமா இருந்தாலும், குழந்தைகள் எழுதும் போதும், படிக்கும்போதும்தான் இதோட அறிகுறிகள்

மத்தவங்களுக்குத் தெரிய வரும். 'வெக்ஸல்'ங்கிற மனநலம் குறைந்த குழந்தைகள் பள்ளியிலிருந்து ஆசிரியர்களை வரவழைச்சு, சென்னையிலிருக்கிற பல ஸ்கூல்களுக்குப் போய், டீச்சர்ஸுக்கு இதுபத்தி விரிவா எடுத்துச் சொன்னோம். எங்களோட இந்த கேம்பைன் மூலமா, இருபது குழந்தைகளுக்கு டிஸ்லெக்ஷியா இருந்தது தெரியவந்திருக்கு. இந்த நோயுள்ள குழந்தைகளை, எங்க காலேஜ்ல ஸ்போர்ட்ஸ் டே வைச்சு சந்தோஷப்படுத்தினோம்'' என்று சற்றே உணர்வுபூர்வமாக ஜெகதா பேசி முடிக்க,

தமது அலைபாயும் கூந்தலை அவ்வப்பொழுது ஒதுக்கியபடி ஹெல்மெட்டின் முக்கியத்துவத்தைப் பற்றிப் பேச முன் வந்தார் ராஷ்மி.

''டூவீலர் விபத்துல சாகறவங்கள்ல 85 சதவிகிதம் பேர் தலையில அடிபட்டுதான் உயிர்விடறாங்க. இதுல பின்னாடி உட்கார்ந்து வர்றவங்களும் பெரும்பாலும் பாதிக்கப்படுறாங்க. இதனால் வண்டி ஓட்றவங்க மட்டுமில்லாம, பில்லியன் ரைடர்ஸும் கட்டாயமா ஹெல்மெட் அணியணும்ங்றதுதான் எங்க கேம்பைனோட நோக்கம். இது சம்பந்தமா பெசன்ட் நகர்ல 'உணர்வுகள்'ன்னு தெருக்கூத்து நாடகம் போட்டோம். மெரினா பீச்ல நடந்த 'பைக் ரேலி'யில நடிகை பூஜாவும், இயக்குனர் விஷ்ணுவர்த்தனும் கலந்துக்கிட்டாங்க'' என்று சீரியஸாகப் பேசியவரிடம், ''எதுக்கு சமுதாய விழிப்புணர்ச்சி நிகழ்ச்சிகளுக்கு சினிமா நடிகர், நடிகைகளைக் கூப்பிடுறீங்க?'' என்று கேட்டதுதான் தாமதம்... சட்டென்று குரலை மாற்றி, ''நாலு பேருக்கு நல்லது நடக்கும்னா, எது வேணும்னாலும் செய்யலாம்'' என்று ராஷ்மி, வேலு நாயக்கராக மாற, ஆஹா... எங்கே விட்டால் 'அவனை நிறுத்தச் சொல்லு, நாங்களும் நிறுத்தறோம்' என்று உணர்ச்சிவசப்பட்டு விடுவாரோ என்று சட்டுப்புட்டென்று வாழ்த்துகள் கூறி ஜூட் விட்டோம்.

- சநகன்

படங்கள்: ஸ்ரீஹரி

# ...மெரினா மச்சும்!



# ஐஸ்க்ரீமுக்கு நோ ா ா ா ா!

மூந்தா நாள் தொடங்கி அமெரிக்கர்களுக்கு ஹிப்னாடிச சிகிச்சைதான் 'லேட்டஸ்ட் கிரேஸ்'. கண்டதைச் சாப்பிட்டு சகட்டு மேனிக்கு உடலை ஊதவிட்டிருக்கும் அமெரிக்கர்கள், இப்பொழுதெல்லாம் ஹிப்னாடிச மருத்துவர்களைக் கண்டாலே கன்னத்தில் போட்டுக் கொள்கிறார்கள். ஏன்? ''உடல் எடையைக் குறைக்க வேண்டுமா? உங்களுக்கு விருப்பமான உணவு வகைகளை உங்களுக்குப் பிடிக்காமல் செய்து விடுகிறோம்'' எனும் வித்தியாசமான விளம்பரத்துடன் கிளம்பியிருக்கிறது ஒரு ஹிப்னாடிச மருத்துவக் குழு.

உதாரணத்திற்கு, உங்களுக்கு மசாலா தோசை என்றால் உயிர் என்று வைத்துக் கொள்வோம். இந்த ஆழ்நிலை மயக்க சிகிச்சையை நீங்கள் எடுத்துக் கொண்டால் (விழிப்பு வந்த கையோடு பீஸ் வாங்கிக் கொள்வார்கள்), அடுத்த முறை ஹோட்டலுக்குப் போகும்பொழுது உங்கள் மூக்குக்கு சமீபத்தில் மசாலா தோசையின் வாசம் தோன்றினால் கூடப் போதும், உங்கள் தலை பெண்டுலம் மாதிரி இடது பக்கமும் வலது பக்கமும் தன்னிச்சையாக ஆட ஆரம்பித்து விடும். 'இவருக்கு மசாலா தோசை ஒத்துக்காது போல!' என்று சர்வர் நகர்ந்து விடுவார்.

மசாலா தோசைதான் என்றில்லை. சாதா தோசை, ஊத்தப்பம், காபி, சாக்லேட், பஞ்சு மிட்டாய், இஞ்சி மொரப்பா என்று இது வரை உங்களுக்கு எதையெல்லாம் பார்த்தால் நாக்கு சப்புக் கொட்டுமோ, அவை எல்லாமே உங்களுக்கு 'கா' விட்டுவிடும். 'நெய் ரோஸ்ட்டா... உவ்வே...' என்று சொல்வீர்கள். ஹிப்னாடிசம் செய்யும் வேலையைப் பார்த்தீர்களா?

எல்லாமே நன்மைக்குத்தான். மணிக்கு மூன்று கோன் என்ற விகிதத்தில் ஐஸ்க்ரீமை நிறுத்தி நிதானமாக உள்ளே தள்ளும் உங்கள் கேர்ல்ஃப்ரெண்ட்டுக்கு மேற்படி சிகிச்சையை அளித்து விட்டால் போதும், உங்கள் பாடு கொண்டாட்டம்தான். 'ஹோ நோ... இப்பவெல்லாம் ஐஸ்க்ரீம்னாலே பிடிக்க மாட்டேங்குதுப்பா' என்று தமது குட்டி மூக்கை உறிஞ்சிக்கொண்டே அவர் குறைப்பட்டுக் கொள்வதை விழுந்து விழுந்து ரசிக்கலாம்.

அமெரிக்கா என்பது நமக்கு தெருக்கோடி போல என்பதால், கூடிய விரைவில் இந்த ஹிப்னா குழு கூடாரத்தைத் தூக்கிக்கொண்டு இங்கேயும் வந்து விடுவார்கள் என்று எதிர்பார்க்கலாம். அதற்குள் ஒரு முறை உங்கள் கேர்ல்ஃப்ரெண்ட்டுக்கு ஐஸ்க்ரீம் வாங்கிக் கொடுத்துவிடுங்கள்.

• மருதன்

# டிசைன் சின்ட்ரோம்!

நத்தையின்மேல் ஒரு சிறுவன்... நத்தையை நோக்கி ஒரு சிறுவன்... காலம் சுழல முதுமையைக் குறிக்கும் கண்ணாடி... தீவிரத்தை வளர்க்கும் புத்தகங்கள்... தடைகளாய் சில பூட்டுகள்.... எல்லாம் வண்ணக் கலவைக்குள். இன்னும் சில.... சிதறிக் கிடக்கின்றன டிஜிட்டல் தூரிகைகளாய் - அந்த ஓவியத்தின் பெயர் 'காஸ்மிக் பெல்ட்!'. ஒரு பெண்ணின் முகம், முகத்துக்குப் பின் அவள் அகத்தில் புதைந்துள்ள உண்மையான முகம் படிந்து கிடக்கிறது. ஓவியத்தின் பெயர் 'டச் ஆஃப் சின்!' என்ன புரியவில்லையா!

தமது ஓவியங்களைப் பற்றி இருபத்தைந்து வயது இளைஞரான பஞ்சுவே சொல்கிறார்.

"என்னோட ஓவியங்கள் ஒரு விஷுவல் மொழி! என்னோட தூரிகை மௌஸ்தான். எல்லாம் கம்ப்யூட்டர்ல வரையப்பட்ட டிஜிட்டல் ஓவியங்கள். சாதாரணமாகப் பார்த்தா புரிஞ்சுக்க முடியாது. ஒவ்வொரு ஓவியத்தையும் மென்மையா உணரணும். அதுல ஒளிஞ்சு கிடக்குற உண்மைகளை அனுபவிச்சுப் புரிஞ்சுக்கணும்."

பஞ்சு ஒரு விளம்பர ஏஜென்சி நடத்தி வருகிறார். சென்னை வின்யாசா ஆர்ட் கேலரியில் 'டிசைன் சின்ட்ரோம்' என்ற பெயரில், காட்சிக்கு வைக்கப்பட்டிருந்த ஓவியங்கள் இவரின் நான்கு வருட உழைப்பில் உருவானவை.

நவீன ஓவியங்கள் தற்போது 'டிஜிட்டல் ஆர்ட்' என்ற பெயரில் வளர்ந்து வருகின்றன. அதுவும் தற்போது வளர்ந்து வருவது மல்டிமீடியா யுகம். மாடர்ன் ஆர்ட் என்ற சாமானியர்களுக்குப் புரியாத பாஷையை தற்போது 'மௌஸ்'களும் பேச ஆரம்பித்துவிட்டன.

• பஞ்சு

• முகில்



# அழகிய தீ!

கேரளாவிலிருந்து தமிழ்நாட்டுக்குள் வந்து விழுந்த நூத்தியெட்டு சொச்சம் நடிகைகளுள் ஸ்ருதி, புது அட்மிஷன்.

### நம்பி வந்தது...?

தமிழ் ரசிகர்களை. இவங்ககிட்ட இருக்குற பாசம் வேற யாருகிட்டயும் இல்ல. எந்த ஊர் ஆர்ட்டிஸ்டையும் சொந்த ஊர் ஆர்ட்டிஸ்ட் மாதிரி பார்த்துப்பாங்க...

### மறக்க நினைப்பது?

நான் நடிச்ச 'காதல் டாட் காம்' படத்தோட தோல்வியை. அடுத்து நடிக்குற 'மந்திரன்', 'இது தான் காதல் என்பதா?' என்னைப் பேசும். அது வரை என்னைப் பத்தின ஒரு எதிர்பார்ப்பில் நானே காத்துக்கிட்டிருக்கேன்.

### மதிப்பது...?

எனது டாக்டரை. என் போட்டோவ 'மலையாள மனோரமா' அட்டையில வெளியிட்டு சான்ஸ் வாங்கித் தந்தவர்.

### பிடிச்ச விஷயம்...?

என்னை கேரளாவுல எல்லாரும் 'அழகிய தீ'ன்னு கூப்பிடறது. என் முகம் அழகுன்னு தெரியும். ஆனா தீ இருக்கற மாதிரி தெரியுது...?

### லட்சியம்...?

குஷ்பு அளவுக்கு இல்லாவிட்டாலும் ஒரு சிம்ரன் அளவுக்காவது தமிழ்ல பெயரெடுக்கணும்.

- பப்பி

அட்டை, படம்: ஆண்டனி ஸ்ரீதர்

நல்ல வேளை
கேஸ் விலை
ஏறலைப்பா....

உணவுப்
பொருள்கள்.

# பெட்ரோல் விலையைவிட பயங்கரம்!

நமது நிதியமைச்சர் ப. சிதம்பரம் பொதுவாக ஆழ்ந்து சிந்தித்துச் செயல்படக்கூடியவர்தான். ஆனால், சமீபகாலமாக, அரசு செலவினங்களுக்கு நிதி திரட்டும் ஆர்வத்தில், அவர் விதித்து வரும் வரிகளும், கட்டணங்களும் சராசரி இந்தியத் தொழிலகங்களைச் சித்திரவதைக்குட்படுத்துகின்றன.

'ஃப்ரிஞ்ச் பெனிஃபிட்' எனப்படும் 'கூடுதல் ஆதாயங்கள்' பேரில் சிதம்பரம் விதித்துள்ள புத்தம்புது வரி, தனியார் நிறுவனங்களை வதைத்துக் கொல்லும் வகையில் அமைந்திருக்கிறது.

இந்த வரியை எதற்காக விதித்துள்ளார் நிதியமைச்சர் என்பது புரியாமல் இல்லை. பல தனியார் நிறுவனங்கள், தங்களுடைய உயர்மட்ட ஊழியர்களுக்குக் கணிசமான ஊதியம் தருவதோடு, அவர்களுடைய பல்வேறு விதமான தனிப்பட்ட செலவுகளையும் ஏற்றுக் கொள்கின்றன. வீட்டு வாடகை, கார், கிளப் உறுப்பினர் கட்டணம் போன்றவை இதில் அடங்கும். இத்தகைய டாம்பீகச் செலவு மூலம் நிறுவனத்தின் லாபத்தைக் குறைத்துக் காட்டி, வரி ஏய்ப்புச் செய்கிறார்கள் என்ற அனுமானத்தில்தான் ஃப்ரிஞ்ச் பெனிஃபிட் வரியை சிதம்பரம் அறிமுகம் செய்திருக்க வேண்டும்.

ஆனால், இப்புதிய வரிவிதிப்பு, வரி ஏய்ப்புச் செய்வோருக்கு மட்டும் வலை விரிக்காமல், அப்பாவிகளான சராசரி, மத்திய ரக தொழிலதிபர்கள் பிழைப்பில் மண்ணை அள்ளிப் போடுகிறது! தொழிலாளர் நலனுக்கு விரோதமாகவும் அமைகிறது.

ஓர் அலுவலகம் அல்லது நிறுவனம், தனது ஊழியர்களுக்காக ஏற்கும் போன் செலவுகள், போக்குவரத்துச் செலவுகள், பயணச் செலவுகள், பயணத்தின்போது ஆகக்கூடிய உணவு - தங்கும்



**கல்கி**



2005 செப்டெம்பர் 18
பார்த்திப புரட்டாசி 2
மலர் : 64
இதழ் : 7




செலவுகள், தொழில் நிமித்தம் வருகிற - போகிற மனிதர்களை உபசரிக்கும் செலவுகள் என அனைத்துக்கும் ஃப்ரிஞ்ச் பெனிஃபிட் வரி செலுத்தியாக வேண்டும். இத்தகைய செலவுகளை இரு வகைப்படுத்தி, ஆகிற செலவில் இருபது சதவிகிதம் அல்லது ஐம்பது சதவிகிதத்துக்கு வரி!

உதாரணமாக, சோப் உற்பத்தி நிறுவனம் ஒன்று, தனது தயாரிப்பை விளம்பரப்படுத்துவதற்காக ஒரு பொது நிகழ்ச்சி நடத்தி, ஷாருக்கானையோ, ஐஸ்வர்யா ராயையோ அழைத்து ஐந்து லட்சம் செலவு செய்தால், அதில் லட்சம் ரூபாய்க்கு முப்பது சதவிகிதம் வரி - அதாவது ரூ.30,000 - செலுத்தியாக வேண்டும்!

ஊழியர்களை மகிழ்விக்க ஒரு நிறுவனம் ஒரு லட்சம் செலவு செய்து வருடாந்திர அன்பளிப்பு தந்தால், ஐம்பதாயிரம் ரூபாய்க்கு முப்பது சதவிகிதம் - அதாவது 15,000 ரூபாய் - வரி செலுத்த வேண்டும்!

தொழிலாளர்களை ஊக்குவிக்க விருந்து ஏற்பாடு செய்தால் வரி; அவர்களுக்குப் பயணப்படி கொடுத்து விடுமுறையில் அனுப்பினாலும் வரி! ஊழியர்கள், தொழிலாளர்களுக்காக நலத்திட்டங்களில் முதலிடு செய்தல், கல்வி உதவித்தொகை அளித்தல் என ஒரு நிறுவனம் செய்யக்கூடிய சமூகநலப் பணிகளுக்குக் கூட, கண்ணை மூடிக்கொண்டு ஒரே சீராக முப்பது சதவிகிதம் வரி விதித்திருக்கிறார் மாண்புமிகு நிதியமைச்சர்.

பேசாமல் இந்த வரியை ஃப்ரிஞ்ச் பெனிஃபிட் டேக்ஸ் என்று அழைப்பதற்குப் பதில், ஃப்ரிஞ்ச் பெனிஃபிட் டார்ச்சர் (சித்திரவதை) என்று அழைக்கலாம்!

வரி செலுத்துவது ஒரு சித்திரவதை என்றால், எந்தெந்தச் செலவுகளுக்கு இந்தப் புதிய வரி உண்டு என்று பார்த்துப் பார்த்துத் தனிக் கணக்கு வைத்துக்கொண்டு வரி செலுத்துவது, இன்னொருவித சித்திரவதை.

சோஷலிஸப் பாதையிலிருந்து விலகி தனியார்மயமாதலை, உலகமயமாதலை இந்தியா ஏற்று நடக்க ஆரம்பித்துப் பல வருடங்களாகிவிட்டன. ஆனால், வரி விதிப்பு விஷயத்தில் மட்டும் நமது அரசுகளின் குறுகிய கண்ணோட்டம் மாறவில்லை!

வருமான வரி ஏய்ப்பைத் தவிர்க்க வேண்டுமானால், ஊதியத்தில் பாதிக்கு மேல் மதிப்புள்ள பல்வேறு சலுகைகளைப் பெறுவோருக்குப் பத்து அல்லது பதினைந்து சதவிகிதம் கூடுதல் வரி என்று அறிவித்துவிட்டுப் போகலாம். வரி வசூல் வேலையும் சுலபமாக முடியும்; சராசரி, மத்தியரக தொழிலகங்களும் பாதிக்கப்படாது.




மாறாக, தொலைபேசி, செல்போன், காபி - டீ செலவுகளுக்கெல்லாம் அபராதம் போல் வரி விதித்தால், ஒரு தொழிலோ, வியாபாரமோ எப்படித்தான் தழைக்கும்! லஞ்ச - ஊழல்தான் செழிக்கும்!

நம் நாட்டைப் போல் முரண்பட்ட நிதிக்கொள்கை வேறெங்கும் காணக் கிடைக்காது. ஒருபுறம் தனியார்மயமாதலையும், உலகமயமாதலையும் ஏற்கிற அரசு, இன்னொரு பக்கம் இப்படி கற்பனைக்கெட்டாத அளவில் வரிச்சுமையை ஏற்றுகிறது. செல்போன் உற்பத்திக்கு ஊக்கம், செல்போன் வலைப்பரப்புக்கு வழிவகை, தனியார் செல்போன் நிறுவனங்களுக்குச் சலுகை... ஆனால், தனது ஊழியர்களுக்கு செல்போன் உபயோகக் கட்டணம் தருகிற நிறுவனங்களுக்கு மட்டும் முப்பது சதவிகிதம் கூடுதல் ஆதாய வரி! (FBT)

தொலைத்தொடர்பும் பயணமும் இன்றி, இன்று எந்த வியாபாரத்தைப் பெருக்க முடியும்...? எந்தத் தொழிலை அபிவிருத்தி செய்ய முடியும்...? அத்தனை அபிவிருத்தி முயற்சிகளுக்கும் வரி விதித்தால், தொழில் எவ்வாறு வளரும் ?! அப்புறம் உலகமயப் போட்டியில் உள்நாட்டு நிறுவனங்கள் எவ்வாறு நிலைக்கும்?

எஃப்.பி.டி செலுத்தும் நிறுவனங்கள் அந்தச் செலவை வருமானவரிக் கணக்கில் குறைத்துக் கொள்ளவும் தடை இருக்கிறது! அதாவது, ஒரே விஷயத்துக்கு இரட்டை வரி செலுத்தியாக வேண்டும்.

நிறைய அன்னியச் செலாவணி ஈட்டித் தரும் மென்பொருள் உற்பத்தித் துறைக்கு மட்டும், எஃப்.பி.டியில் கணிசமான சலுகை அளித்துள்ளார் நிதியமைச்சர். இந்த ஓரவஞ்சனையை விஞ்ச ஏதேனும் உண்டா!

இத்தகைய கொடூரமான வரி விதிப்பினால் எந்த நற்பயனும் அரசுக்கு விளையாது. மாறாக, இருபெரும் தீங்குகள் இந்தியப் பொருளாதாரத்துக்கு ஏற்படும். ஒன்று: வரி ஏய்ப்பவர்கள் எப்படியும் ஏய்க்க வழி கண்டு தப்புவார்கள் - கறுப்புப் பணப் புழக்கம் அதிகமாகும். இரண்டு: கணக்கு வழக்குகளை ஒழுங்காக வைத்திருக்கும் நேர்மையான நிறுவனங்கள் நலிந்து, குற்றுயிரும் கொலையுயிருமாக ஆகிவிடும்!

சிதம்பரம் சிந்திக்கத் தெரியாதவரல்ல... ஆனால், இந்த விஷயத்தில் சிந்திக்க மறுத்திருக்கிறார். இனியேனும் நிலைமையை விரைந்து சீர் செய்து, இந்தியாவைக் காப்பாற்ற அவரிடம் விண்ணப்பிக்கிறோம்.

○

தேனல்

# சென்னையிலிருந்துதான் சாதிக்கணுமா?

**ஜெயா டி.வி காலை மலர் நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கும் லாவண்யா, கோயம்புத்தூரிலிருந்து மாதத்திற்கு இருமுறை வந்துதான் படப்பிடிப்பில் கலந்து கொள்கிறார். 'ஏனுங்க இப்படி?' என்றால், கொங்கு தமிழில் கோயமுத்தூர் குசும்பு கொப்பளிக்க விளாசித் தள்ளுகிறார்.**

"இதே கேள்வியைத்தானுங்க கோயம்புத்தூர்லயும் கேக்கறாங்க. பார்த்தவுடனே 'என்னம்மணி, இங்கிருக்க'ங்கிறாங்க. ஏன், எல்லாம் சென்னையிலிருந்துதான் சாதிக்கணுமாக்கும்! எங்கூரு ராஜேஷ்குமார், நரேன் கார்த்திகேயன், நிருபமா வைத்தியநாதன் வரிசையில நானும் சாதிச்சு நிக்கப் போறேங்க. 'காலை மலர்'ல தமிழ்நாட்டோட அத்தனை வி.ஐ.பிக்களையும் சந்திச்சதால, எல்லார்கிட்டயும் நல்லா பழக்கமுங்க. எங்கூர்ல ஏதாச்சும் விழான்னா நேரா என்கிட்டதான் வருவாங்க. இது மாதிரி நிறைய வி.ஐ.பிகளை கோயம்புத்தூர் விழாக்கள்ல கலந்துக்க வைச்சிருக்கேன். இதுவரைக்கும் நான் கோவைக்கும் சென்னைக்கும் பயணம் செய்த பணத்துல, ஒரு சேரன் எக்ஸ்பிரஸையே விலைக்கு வாங்கியிருக்கலாம்."

"டி.விதான் உங்களுக்கு மெயினா?" என்றால்,

"இல்லீங்க, சைடுதானுங்க. மெயின் பரதநாட்டியமுங்கோ. நாலரை வயசுல கத்துக்க ஆரம்பிச்சு, ஏழு வயசுல அரங்கேற்றம் பண்ணேனுங்க. ஐந்நூறு தடவைக்கு மேல மேடைகள்ல ஆடியிருக்கேனுங்க. கே.ஜே.சரசாதான் என் குருங்க. இன்றைய சூழல்ல வளர்ற பிள்ளைங்க காசு கொடுத்துத்தான் சபாவுல ஆட வேண்டியிருக்குதுங்க. பரதநாட்டியம் செலவு வைக்கிற ஒரு கலையாயிருச்சுங்க. வெறும் பரதநாட்டியம் கத்துக்கறதால மட்டும் வாழ்க்கையை ஓட்டிட முடியாதுங்க. சம்பாத்தியத்துக்கு கைவசம் வேற தொழில் வைச்சிருக்கணும்ங்க" என்று மூச்சுக்கு முந்நூறு தரம் 'ங்க' போட்டுப் பேசிய லாவண்யாவைப் பற்றி நம்ப முடியாத விஷயம், திருமணமாகி அவருக்கு ஒன்றரை வயதில் 'ங்கா' இருப்பது.

- எழில்

என்
ஸ்நேகா
நல்லா
கதை
எழுதுவாள்!

என்
ரிஷி
பிரமாதமா
வரைவான்!

என்
பையன்
விஸ்வேஸ்
நிறைய
ஜோக்ஸ்
சொல்லுவான்!



இதெல்லாம் மற்றவர்களுக்கும் தெரிய வேண்டாமா?

**உங்கள் குழந்தைகளின் திறமைகள் வளரவும் வெளி உலகுக்குத் தெரியவும் கோகுலத்தைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்!**

தனி இதழ் : ரூ.6/-

# கோகுலம்

ஆண்டு சந்தா : ரூ.72/-

குழந்தைகளின் குதூகலம்!

47 NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை-600 032



# பரிசு!

## பிரதாப்சிங்

நெருங்கிய நண்பனின் திருமணம்.

மறக்கவியலாத பரிசினை அவனுக்குக் கொடுக்க விரும்பிய நான், பணத் தட்டுப்பாடு காரணமாக வெறுங்கையுடனே சென்றேன்.

"வாடா" என்று புன்சிரிப்போடு நண்பன் என்னை அன்புடன் வரவேற்றான்.

ஹாலில் வரிசை வரிசையாய்ப் போடப்பட்டிருந்த வண்ண நாற்காலிகளில் ஒன்றை நிரப்பினேன்.

சாஸ்திர சம்பிரதாய சுபச் சடங்குகள் நிறைவு பெற்றன.

'கெட்டிமேளம்... கெட்டிமேளம்...'

நண்பன் மணமகளுக்குத் தாலியைக் கட்டினான்.

மொய் எழுதுவோரையும், பரிசுகள் வழங்குவோரையும் பார்த்துப் பார்த்து வெட்கத்தில் நான் குழம்பிப் போனேன்.

முகூர்த்தத்தைத் தொடர்ந்து விருந்துகளை கட்டியது.

முதல் பந்தியில் கொஞ்சம் பேர் சாப்பிட்டு முடித்துவிட்டனர்.

அடுத்த பந்தியை ஆரம்பிக்கும் முன்பு எச்சில் இலைகளை எல்லாம் அப்புறப்படுத்த வேண்டும்.

அதற்காக சொல்லிவைத்த வேலையாள் வரவில்லை என்பதே அப்போதுதான் தெரிந்தது.

எச்சில் இலைகளை எடுப்பது தன்னுடைய வேலையல்ல என்று சமையல் காண்ட்ராக்டர் ஒதுங்கிப் போய்விட்டார்.

அந்த வேலையை யார் செய்வது என்பதில் மணமகன், மணமகள் இருவீட்டார் இடையில் கௌரவப் பிரச்னை ஏற்படும் சூழ்நிலை காணப்பட்டது.

இனியும் தாமதிக்கக்கூடாது.

சட்டென்று வேட்டியை மடித்துக் கட்டினேன்.

இடது கையில் பெரிய கூடையொன்றைத் தூக்கியவன், வலது கையால் மளமளவென எச்சில் இலைகளைத் துப்புரவாக எடுத்து முடித்து வெளியே கொண்டு குப்பைத் தொட்டியில் வீசினேன். திரும்பி வந்து பந்திப்பாய்களை உதறி ஒழுங்குபடுத்தினேன்.

அடுத்த பந்தி அருமையாகத் துவங்கிவிட்டது.

"இந்த உதவியை என் வாழ்நாள் பூராவும் மறக்க மாட்டேண்டா" என்று மன நெகிழ்வுடன் கூறியவாறு, மணக்கோலத்தில் இருந்த நண்பன் என் கைகளைப் பற்றி இழுத்து, என்னை இறுக்கமாய் கட்டியணைத்துக் கொண்டான்.

அவனால் மறக்கவியலாத கல்யாணப் பரிசு வழங்கிவிட்ட சந்தோஷத்தில் என் மனசும் பூரித்தது.

# ஸ்ரீராமகிருஷ்ண மடம்

ரிசர்வ் லைன், புது நத்தம் சாலை, மதுரை - 625 014.
தொலைபேசி : 0452-2680 224, 2681 181.
e-mail : rkmath@eth.net



விநாயகர் துணை

## பொதுமக்களுக்கு ஓர் வேண்டுகோள்

அன்புடையீர்,

கடவுளின் கிருபையை முன்னிட்டு எழுதுவது. அன்பார்ந்த வணக்கம்.

மதுரையில் ஸ்ரீராமகிருஷ்ண மடம் 1987-ஆம் ஆண்டு துவக்கப்பட்டது. எனினும் 1998-ஆம் ஆண்டுதான் இங்கு ஸ்ரீராமகிருஷ்ணர் கோயில் கட்டப் பெற்றது. எனவே இந்த மடம் 7 வயது குழந்தையைப் போன்று இனி வளர வேண்டிய நிலையில் உள்ளது.

மதுரை, ஸ்ரீராமகிருஷ்ண மடம், 'ஸ்ரீசாரதா வித்யாலயா' என்ற துவக்கப் பள்ளியை நடத்தி வருகிறது. இதில் Pre K.G. முதல் 5-ஆம் வகுப்பு வரை 492 மாணவ-மாணவிகள் கல்வி பயின்று வருகிறார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ண மடம் ஸ்ரீசாரதா வித்யாலயா பள்ளிக் கட்டிடத்தில் இலவச கல்வி போதனை வகுப்புகளும் (Free Tuition Center) நடத்தி வருகிறோம். இதில் நான்காம் வகுப்பு முதல் +2 வகுப்பு வரை அரசு பள்ளிகளில் பயிலும் மிகவும் பின்தங்கிய ஏழை மாணவ, மாணவிகள் 475 பேர் கல்வி கற்றுப் பயனடைந்து வருகிறார்கள். இந்த வகுப்புகள் மாலை 5.30 மணி முதல் 7.30 மணி வரை நடைபெற்று வருகிறது.

மடத்தில் நாள்தோறும் காலை 7.00 மணிக்கு 280 ஏழைக் குழந்தைகளுக்கு அன்ன தானம் (Poor Feeding) வழங்கப்படுகிறது. அதன் பொருட்டு உணவு சமைப்பதற்கும், அதை விநியோகிப்பதற்கும் ஓர் அறை தேவைப்படுகிறது

தற்போது மதுரை, ஸ்ரீராமகிருஷ்ண மடம் 'ஸ்ரீசாரதா வித்யாலயா' பள்ளிக் கட்டிடத்தில் போதிய இடவசதி இல்லை. ஆதலால் இப்போது உள்ள சாரதா வித்யாலயா பள்ளிக் கட்டிடத்திற்கு அருகில், ஓர் அறை 16 அடி நீளம் X 24 அடி அகலம் வீதம், ஏழு பெரிய வகுப்பறைகளைக் கட்ட ஆரம்பித்திருக்கிறோம். இந்தக் கட்டிடத்தின் மொத்த சதுர அடி 4,500 ஆகும்.

கட்ட ஆரம்பித்திருக்கும் புதிய கட்டிடத்தில் முதல் ஆறு அறைகளில் பள்ளியும், Free Tuition Center-ரையும் நடத்தயிருக்கிறோம். ஏழாவதான கடைசி ஓர் அறையை ஏழைகளுக்கான அன்ன தானப் பணிகளுக்குப் பயன்படுத்தயிருக்கிறோம். இதற்கான கட்டிடப் பணி இப்போது நடந்து வருகிறது.

இந்த ஏழு அறைகளைக் கட்டி முடிப்பதற்கு ரூபாய் 20 இலட்சம் செலவாகும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. இதில் ஓர் அறைக்கு ரூபாய் 2.25 இலட்சம் செலவாகும்.

புதிய ஏழு அறைகளைக் கொண்ட பள்ளிக் கட்டிடம் கட்டி முடிப்பதற்குத் தாராளமாக நன்கொடை வழங்கி உதவி செய்யும்படி, அன்புள்ளம் கொண்ட பொதுமக்கள் அனைவரையும் பெரிதும் அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இப்பள்ளிக் கட்டிடம் கட்டுவதற்கு ரூபாய் ஒரு இலட்சத்திற்கும், அதற்கும் அதிகமாகவும் நன்கொடை வழங்குபவர்களின் பெயர்கள், கட்டப்பட இருக்கும் புதிய கட்டிடத்தில் சலவைக் கல்லில் வைக்கப்படும்.

**நன்கொடைகளுக்கு 80-G பிரிவின்கீழ் வருமான வரி விலக்கு உண்டு. நன்கொடைகளை 'ராமகிருஷ்ண மடம், மதுரை' என்ற பெயரில் காசோலை மூலம் அனுப்பி உதவுங்கள்.**

இறைவன் தங்களுக்கு நீண்ட ஆயுளையும், ஆரோக்கியத்தையும் தந்தருள்வாராக.

இறைவன் தொண்டில் தங்களன்புள்ள,

**சுவாமி கமலாத்மானந்தர், தலைவர்.**

நம்பவே முடியவில்லை! மின்சாரம் இல்லை. சாலைகள் இல்லை. பள்ளிக் கூடம் இல்லை. ரேஷன் கடையில்லை. "அரசியல்வாதிங்க கூட இங்கே ஓட்டுக் கேட்டு வந்ததில்லைங்க தம்பி, மலையும் காடும்தான் எங்க தெய்வம்... இதை நம்பித்தான் எங்கப் பொழப்பு" அழாத குறையாகச் சொன்ன கிராமத்து மக்களைப் பார்த்தபோது, நந்தா படப்பிடிப்பு சமயத்தில் மண்டபம் முகாமில் நான் பார்த்த தமிழ் அகதிகள்தான் நினைவுக்கு வந்தார்கள். சொந்த மண்ணில் பாதுகாப்பு இல்லாமல் கடல் கடந்து வந்தவர்கள் இலங்கை அகதிகள் என்றால், இவர்களை சொந்த தேசத்து அகதிகள் என்பதா?

தர்மபுரி மாவட்டத்தின் மேற்குத் தொடர்ச்சி மலையில் நான் பார்த்த பல கிராமங்களின் நிலை இப்படித்தான் இருந்தது. மேல்நிலைப் பள்ளியில் படித்த போது இளைஞர் செஞ்சிலுவைச் சங்கத்தில் நான் தீவிர உறுப்பினர். கோடை விடுமுறையில் ஒரு 'டிரெக்கிங் கேம்ப்'. வெள்ளைச் சீருடையும், கழுத்தில் சிவப்பு நிற ஸ்கார்ப்பும் அணிந்து, கல்லும் மண்ணும் நிறைந்த ஒற்றையடிப் பாதைகளின் வழியே ஒரு மலை கிராமத்தை அடைந்தோம்.

வெட்டவெளியில் குளித்து, துவைத்து, சாப்பிட்டு, மக்களோடு மக்களாகத் தங்கி, அந்த கிராமத்துக்கு மண் சாலைகள் போட்டோம். சின்னச் சின்னக் குட்டைகளைத் தூர்வாரினோம். அங்கிருந்த சிறுவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தோம். பதினான்கு நாட்கள் ஓடியதே தெரியவில்லை. பதினைந்தாவது நாள், சினிமாவே பார்க்காத அந்த மக்களுக்காக ஒரு நாடகம் போட்டு, அவர்களைச் சந்தோஷப்படுத்தலாம் என்று முடிவானது. எனக்கு எமதர்மன் வேடம். முதல்நாள் ரிகர்ஸல். "சித்ரகுப்தா! இவர் செய்த குற்றம் என்ன?" என்று வெட்டரிவாள் மீசையை முறுக்கியபடி கேட்க வேண்டும். அதற்கு சித்திரகுப்தன் பதில் சொன்னவுடன் "ஹா...ஹா...ஹா..." என்று கம்பீரமாகச் சிரிக்க வேண்டும். அதன் பிறகு தீர்ப்புச் சொல்ல வேண்டும். ஒத்திகையின் போது, ஏதோ பரவாயில்லை என்ற ரீதியில் சமாளித்தேன். ஆனால் நாடகத்தில் சூப்பராய் சொதப்பிய ஒரே ஆள் நான்தான். கம்பீரமாகச் சிரிப்பதற்கு பதிலாக, ஏதோ பூனைக்குட்டி கத்துவது போலச் சிரித்து வைக்க... எனது சிரிப்பைக் கேட்டு எல்லோரும் வாய்விட்டுச் சிரித்தார்கள்! என்னைக் கூப்பிட்டு, என் தலையிலிருந்த கிரீடத்தையும் கையிலிருந்த கதாயுதத்தையும் பிடுங்கிக் கொண்டு, "கீழே போய் உட்கார்ந்து சமர்த்தா நாடகத்தைப் பார்!" என்று உட்கார வைத்து விட்டார்கள். அந்தக் கணமே என் வேடத்தில் இன்னொரு மாணவனை நடிக்கவும் வைத்து விட்டார்

# வேலை




கள். ஒரு நடிகரின் மகனுக்கு இதைவிடப் பெரிய அவமானம் இருக்க முடியுமா? நீச்சல் தெரியாமல் தண்ணீருக்குள்ளேயே அழுத மீன் குஞ்சைப் போல, முட்டிக் கொண்டு வந்த அழுகையை அடக்கிக் கொண்டு மனசுக்குள்ளேயே அழுதேன். எனது வேடத்தை ஏற்று நடித்தவன் கம்பீரமாகச் சிரித்தபோதெல்லாம் என்னைப் பார்த்துச் சிரிப்பது போலவே இருந்தது. அடுத்த சில தினங்களில் அந்தக் கேம்ப் முடிந்து திரும்பியபோது, சிறப்பாக சேவை செய்தமைக்காக 'பெஸ்ட் பெர்ஃபார்மர்' லிஸ்டில் என் பெயரும் இருந்தது. அதற்கென்று தனியே பாராட்டுச் சான்றிதழ் வேறு கொடுத்தார்கள். ஆனால் நடிப்பில் என்னால் பெஸ்ட் பெர்ஃபார்மர் என்று பெயர் வாங்க முடியவில்லையே!

அப்போதே முடிவு செய்தேன், நடிப்பு நமக்குச் சரிப்பட்டு வராது. அதற்கென்றே பிறந்தவன் போல கார்த்தி இருக்கிறான். தம்பி ஆடுவான், பாடுவான். வீட்டிலும் கூட அவனைத்தான் எதிர்பார்த்தார்கள். ஒரு நடிகனாவதற்குரிய எந்த அறிகுறியும் என்னிடம் இல்லை. சிறு வயது முதலே ஒரு நடிகரின் பையனாக நான் வளரவில்லை. நடிப்பு என்று வந்துவிட்டால், எல்லோருக்கும் இந்த முகத்தைப் பிடிக்க வேண்டும் என்று அவசியம் கிடையாது. அதற்கெல்லாம் ஆசீர்வதிக்கப்பட்டிருக்க வேண்டும். நடிப்புத் தொழிலில் வாய்ப்புகள் அவ்வப்போது வரும், போகும். அதுவே ஒரு தொழிலதிபர் என்றால், நிறையப் பேருக்கு வேலை கொடுக்கலாம் நடிப்புத் துறையில் இல்லாமல் பிசினஸ் செய்கிறவர்கள் எவ்வளவு பணம் சம்பாதிக்கிறார்கள்?

கல்லூரியில் என்னைத் தவிர மற்ற மாணவர்களைப் பார்க்கிறபோது, அவர்கள் வந்து போகும் கார்கள், செலவு செய்யும் விதம் எல்லாமே பிரம்மாண்டம். ஐயாயிரம், பத்தாயிரம் என்று அவர்கள் செலவு செய்கிற அளவுக்கு என்னால் முடியாது. அப்போதுதான் புரிந்தது, நம்முடைய குடும்பம் பணக்காரக் குடும்பம் இல்லை. சாதாரண மிடில் க்ளாஸ். நாம் கைநிறைய சம்பாதிக்க வேண்டுமே என்ற பாதுகாப்பற்ற பய உணர்வு பற்றிக் கொண்டது. அப்பாவுக்கும் படங்கள் குறைந்து விட்டன. குடும்பத்துக்கு மூத்த பையன். இருபத்து நான்கு வயது வரை வளர்த்துவிட்டு,

# கிடைச்சிடுச்சு...!

பட்டதாரி ஆக்கிய அப்பா, அம்மாவுக்கு இன்னும் சம்பாதித்துக் கொடுக்காவிட்டால் எப்படி என்று வெகுண்டெழுந்து களத்தில் இறங்கினேன். தீவிரமாக வேலை தேடிக்கொண்டிருந்த சமயத்தில்தான் சண்டியர் வேலை!

**ப**க்கத்து வீட்டு அக்கா எங்கள் குடும்பத்துக்கு நெருங்கிய உறவினர். கிராமத்தை கம்பீரமாகவும், ஃபான்டஸியாகவும் காட்டிய பிரபல சினிமா இயக்குனர்தான் அவரது கணவர். எப்போதுமே அவர் பிஸி. அக்காவோ வேலையாட்கள் வைத்துக் கொள்ளாமல், தாமே மார்க்கெட்டுக்குப் போய் காய்கறி வாங்கி வந்து, தன் கையால் சமைத்து, கணவரை கண்ணும் கருத்துமாகப் பார்த்துக் கொள்வார். அவர் காய்கறி மார்க்கெட்டுக்குப் போய் வரும்போது, ஒருவார காலமாக காரில் அவரைப் பின்தொடர்ந்து வந்திருக்கிறான் ஒரு ஆள். இதை ஆரம்பத்திலேயே எங்கள் வீட்டுக்கு வந்து சொன்னார். இன்னும் ஒரு நாள் பார்க்கலாம் என்று சொல்லி விட்டு, நான் மறந்தே போய்விட்டேன். ஒரு வாரம் ஓடியிருக்கும். காய்கறி மார்க்கெட்டிலிருந்து அக்காவின் போன். ''சரவணா! அந்தப் பொறுக்கி தொல்லை தாங்க முடியலப்பா'' என்றார். கொதித்துப் போன நான் ''நீங்கள் அங்கேயே வெயிட் பண்ணுங்க'' என்று சொல்லிவிட்டு மார்க்கெட்டுக்கு விரைந்தேன். வழியில் எதிர்ப்பட்ட கல்லூரி நண்பன், "டேய், எங்கேடா இவ்ளோ டென்ஷனா போற?'' என்று இணைந்து கொண்டான். ஒரு டெலிபோன் பூத்தில் காய்கறிக் கூடையோடு ஒடுங்கி நின்றிருந்தார் அக்கா. என்னைப் பார்த்ததும் நூறடி தூரத்தில் நின்றிருந்த காரைக் கை காட்டினார். "நீங்கள் இங்கேயே நில்லுங்கள்" என்று சொல்லி விட்டு காரை வேகமாக நெருங்கினேன். அதுவரை நான் கட்டிப்புரண்டு யாரோடும் சண்டைபோட்டதில்லை.

நாயகன் படத்தில் வரும் வில்லனைப் போல அப்படியொரு உயரம். என் கண் முன்னால் அக்காவையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த ஆளைப் பார்த்து, "இழே இறங்குடா பொறுக்கி'' என்று கத்தினேன். அவனுக்குப் புரிந்து விட்டது. "நான் யார் தெரியுமா?"- குரலை உயர்த்தி முறைத்தான். "நீ யாரா இருந்தா என்னடா! பொம்பளைங்கன்னா பப்ளிக் பிராப்பர்ட்டின்னு நெனச்சியா?'' என்று கேட்டபடியே காரிலிருந்து அவனை வெளியே இழுத்து, அடித்துத் துவைத்து எடுத்துவிட்டேன். கூட வந்த நண்பன், "எங்கிட்ட விடு மச்சி" என்றான். நான் விடவில்லை. ஒட்டுமொத்த மார்க்கெட்டும் வேடிக்கை பார்த்ததே தவிர, பக்கத்தில் யாரும் வரவில்லை. பாண்டி பஜார் காவல் நிலையத்தில் ஒப்படைத்து விடுவது என்ற முடிவோடு, அந்த ஆளை இழுத்துக்கொண்டு புறப்பட்டபோது, கேள்விப்பட்டு அப்பா வந்துவிட்டார். ஆனாலும் ,பிடிவாதமாக காவல் நிலையத்தில் ஒப்படைத்துவிட்டு வீடு வந்தேன். அடுத்த இரண்டு மணி நேரத்தில் ஒரு வி.ஐ.பி. வீட்டிலிருந்து போன். "உங்க பையன் என் மகனை கன்னாபின்னாவென்று அடிச்சிருக்கான்'' இதைக் கேட்ட அப்பா, "என் பையன்ங்கிறதால இத்தோடு விட்டான். நானா இருந்தா நிலைமை இன்னும் மோசமாயிருந்திருக்கும்'' என்றார்.

இந்தச் சம்பவம் நடந்து ஒரு வாரம் கூட ஓடியிருக்காது. அடிதடியின் போது அருகில் இருந்த கல்லூரி நண்பனிடமிருந்து ஒரு போன். ''மச்சி நமக்கு வேண்டிய பொண்ணு கிட்ட ஒரு ராஸ்கல் சில்மிஷம் பண்ணிட்டான்... அவனுக்கு லெஸன் கத்துக் கொடுக்கணும். ஒரு கை கொறையுது வர்றியா?'' என்றான். 'அடப்பாவிகளா? விட்டால் அடியா



ளாகவே ஆக்கி விடுவார்கள் போலிருக்கிறதே' என்று வேலை தேடுவதில் குறியாக இருந்தேன்.

எனது முதல் குறி அம்பத்தூர் தொழிற்பேட்டையில் இயங்கி வந்த பி.என்.டி. பிரபலமான எக்ஸ்போர்ட் நிறுவனம். இந்தத் தொழிற்சாலையில் வேலை கிடைக்கிறதோ இல்லையோ, எப்படியாவது உள்ளே நுழைந்து ஒரு முறை சுற்றிப் பார்த்துவிட வேண்டும் என்ற ஆவலோடு, அம்பத்தூர் ஃபேக்டரிக்கு விசிட் அடித்தேன். ஃபேக்டரி மேனேஜரை சந்தித்து அனுமதி கேட்கலாம் என்று முதல் முறையாகப் போன போது, யாருமே என்னைக் கண்டு கொள்ளவில்லை. நான் யாரென்று எப்போதுமே சொல்லிக்கொள்ள விரும்பாதவன். இரண்டாவது வாரம் போன போது 'அடுத்த வாரம் வாருங்கள், மேனேஜர் பிஸி' என்று அனுப்பி விட்டார்கள். மூன்றாவது வாரம் சளைக்காமல் போய் நின்றபோது, மேனேஜர் கூப்பிட்டு "என்ன தம்பி, உனக்கு என்ன வேண்டும்?" என்றார்.

"ஃபேக்டரியை சுற்றிப் பார்க்க வேண்டும்" என்றேன். "என்னோட ஃபேக்டரியை சுற்றிப் பார்க்க நீ யாரு?" என்றார். "நான் பி.காம் முடிச்சிருக்கேன் சார். கார்மெண்ட் தொழில்ல வேலை கத்துக்கணும்னு விரும்பறேன். இங்கே ஏதாவது வேலை கிடைக்குமா?" என்று அடக்கமாகக் கேட்டேன். ஏற இறங்க என்னைப் பார்த்தவர், 'ஆண்கள் போடுற சட்டைக்கும் பெண்கள் அணியற சட்டைக்கும் அடிப்படை வித்தியாசம் என்ன தெரியுமா?" என்றார். "ஆண்களுக்கு இடது பக்க பட்டி மேலே வரும். வலது பக்க பட்டன் பட்டி உள்ளே போகும். பெண்களுக்கு அப்படியே இது ஆப்போசிட்டா இருக்கும். பேண்ட் ஃபிப் கூடத்தான்" என்று அவர் கேள்விக்கு இரண்டு பதில்கள் சொன்னேன். "ரொம்ப அதிகமா பேசற... ஆனால் விவரமான ஆளா இருக்கே... எந்த ஊரு?" என்றார். "இங்கேதான் தி.நகர்" என்றேன்... "உன்னோட சொந்த ஊரைக் கேட்டேன்...?" என்றதும் சட்டென்று "கோயமுத்தூருங்க" என்றேன். "அதானேப் பார்த்தேன்..." என்றவர், "கொஞ்ச நாள் வேலைக்கு வெச்சுக்குவேன். மூணு மாசமா, ஆறு மாசமான்னு சொல்ல முடியாது. ஒண்ணாம் தேதி வந்து ஜாயின் பண்ணிக்கோ... ஓடு!" என்றார். எனக்கோ தலைகால் புரியவில்லை.

யாருடைய சிபாரிசும் இல்லாமல் நானே தேடிக்கொண்ட வேலை. வேலையில் சேர ஐந்து நாட்கள் அவகாசமிருந்தது. 'நமக்கு என்ன வேலை கொடுப்பார்கள்? பி.காம் வேற முடிச்சிருக்கோம். நம்மகிட்ட தனியா பொறுப்புகளைக் கொடுத்து பார்த்துக்கச் சொல்லுவாங்க. நிறையப் பேரை கட்டி மேய்க்க வேண்டியிருக்கும்...' கனவுகளோடு முதல் தேதி காலை எட்டு மணிக்கு ஃபேக்டரியில் இருந்தேன். எட்டரை மணிக்கு மேனேஜர் வந்தார். என்னை ஓரக் கண்ணால் பார்த்தார். "என்னப்பா, இன்னிக்கும் ஆபீஸ் பாய் லீவா? என் டேபிள் இவ்ளோ மோசமா இருக்கு" என்று கத்திக் கொண்டே "ஹலோ மிஸ்டர் சரவணன்... இங்க வாங்க" என்றார்... அடேங்கப்பா! மரியாதை இவ்ளோ பலமாக இருக்கிறதே என்று அவரை நெருங்கி, "சொல்லுங்க சார்" என்றேன். "ப்ரூமர் இருக்கும்... எடுத்து ஆபீஸ் ரூமைக் கூட்டிப் பெருக்குங்க" என்றார்.



**(டைரியைத் தொடர்வேன்)**



# "நேற்றைய வல்லரசு; இன்றைய

**செப்டம்பர் 14. மதுரை மாநாட்டில், தமது அரசியல் கட்சியின் பெயரையும் கொள்கைகளையும் நடிகர் விஜயகாந்த் அறிவிக்கிற நாள். சரியாக அதற்கு ஒரு வாரம் முன்னதாக மாநாடு நடக்குமிடத்திற்கு நாம் சென்றிருந்தோம்.**

இதுவரையில் எந்தவொரு அரசியல் கட்சி மாநாடுகளிலும் கூடிடாத, பெருங் கூட்டத்தைக் கூட்டிக் காட்டிட வேண்டுமென்கிற முனைப்பு நடிகர் விஜயகாந்த் ரசிகர்களிடையே இருக்கிறது. தமிழகத்தின் மூலை முடுக்குகளில் இருக்கிற மிகவும் சின்னஞ்சிறு கிராமத்து மண்சுவரில்கூட, மாநாட்டு விளம்பரம் இடம்பிடித்திருக்கிறது. சின்ன சைஸ் பத்துக்கு இருபதிலிருந்து மிகப் பிரம்மாண்ட மெகா சைஸ் டிஜிட்டல் பேனர்கள் வரை ஒவ்வொன்றும் காண்போரை மிரள வைக்கின்றன.

மதுரையிலிருந்து திருமங்கலம் செல்லும் சாலையில் பதினான்கு கி.மீ தூரத்தில் திருநகர் அருகே அமைந்துள்ளது மாநாடு நடைபெறவிருக்கின்ற இடம். மாநாட்டுத் தேதி அறிவிக்கப்பட்டு மூன்று மாதங்கள் ஆகின்றன. அதற்கும் மூன்று மாதங்களுக்கு முன்பிருந்தே அந்த இடத்தைச் செப்பனிடும் வேலை துவங்கப்பட்டிருக்கிறது. எழுபத்து நான்கு ஏக்கர் பரப்பளவு. மாநாட்டு நுழைவாயிலிலிருந்து தொடர்ச்சியாக இரும்புத் தகடுகள் சுவர் போலப் பொருத்தப்பட்டு வட்ட வடிவமாக வடிவமைக்கப்பட்டுள்ளது திடல். அதனுள்ளே மிகப் பிரம்மாண்ட பந்தல். இங்கே சுமார் ஐந்து லட்சம் பேர் அமரலாம் எனக் கூறப்படுகிறது. நுழைவுக் கட்டணம் ஐந்து ரூபாய். நிகழ்ச்சிகளைக் காண திடலின் உள்ளே ஐந்நூறு இடங்களில் தொலைக்காட்சிப் பெட்டிகள். வெளியே பல இடங்களில் அகன்ற திரைகள்.

மாநாட்டுக்கு வருகின்ற வாகனங்களை நிறுத்தி வைப்பதற்கென, ஐம்பது ஏக்கர் பரப்பளவில் தனியாக ஓர் இடத்தைத் தேர்வு செய்துள்ளனர். திருமங்கலம் மெயின் ரோட்டின் மேற்குப் பகுதியில் ஆஸ்டின் பட்டி கிராம ஆஸ்பத்திரி அருகே, கார் பார்க்கிங் இடம் அமைக்கப்பட்டுள்ளது. குடிநீர் வசதி, கழிவறை வசதி, மருத்துவ வசதி என அத்தியாவசியத் தேவைகளுக்கு உரிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. மாநாட்டுக்கு வருபவர்கள் மது அருந்தக்கூடாது எனவும், இரவு நேரங்களில் வாகனங்களை ஓட்டி வரக்கூடாது என்றும் வலியுறுத்தப்பட்டுள்ளது. மாநாட்டுத் திடலை விஜயகாந்த் இதுவரை





# பேரரசு; நாளைய தமிழக அரசு!”

## - மதுரை இடிமுழக்கம்

ஐந்தாறு தடவை நேரில் பார்வையிட்டுச் சென்றுள்ளார். மாநாடு குறித்து ஒவ்வொரு மாவட்டங்களிலும், ஒவ்வொரு ஒன்றியங்களிலும் ஆலோசனைக் கூட்டம் நடைபெற்று வருகிறது. சுமார் இருபது லட்சத்துக்கும் குறைவில்லாத அளவில் ஆண்களும் பெண்களும் கூடுவார்கள் என்று ரசிகர் மன்றங்கள் தரப்பில் சொல்லப்படுகிறது.

கட்சிக் கரைவேட்டியுடன்தான் ரசிகர்கள் மாநாட்டுத் திடலுக்கு வர வேண்டுமெனக் கட்டளையிட்டிருக்கிறார் கேப்டன்.

"எங்கள் கேப்டன் புதிதாக அரசியல் கட்சி துவங்கப் போகிறார் என்ற அறிவிப்பு, பெண்கள் மத்தியில் மிகுந்த வரவேற்பைப் பெற்றுள்ளது. அவர்களுக்கு கடந்த நான் கைந்து தேர்தலாக கருணாநிதி - ஜெயலலிதான்னு மாறி மாறி வோட்டுப் போட்டு சலிச்சுப் போச்சு. பொதுவா மக்கள் மனசுல தமிழ்நாட்டு அரசியல்ல ஒரு மாற்றம் வரணும்ங்கற எண்ணம் வந்துடுச்சு. அந்த மாற்றத்தை எங்களோட கேப்டன் தலைமை தாங்குற புதிய அரசியல் கட்சி நிச்சயமாக் கொண்டு வரும்!'' என்றார் திருச்சி மாவட்ட மகளிரணி அமைப்பாளர் கே. சசிகலா.

“வியாபாரிகள், தொழிலதிபர்கள் என்று எவரிடமும் நன்கொடை வாங்காமல் நடத்தப்படுகிற மாநாடு எங்கள் மாநாடு. நேற்றைய வல்லரசு; இன்றைய பேரரசு; நாளைய தமிழக அரசு எங்கள் கேப்டன்! பல வருடங்களாக பொதுமக்கள் - ஏழைகள் பலருக்கும் எங்கள் ரசிகர் நற்பணி மன்றங்கள் மூலமாக நல உதவிகள் தொடர்ந்து செய்யப்பட்டு வருகின்றன. பொதுமக்களுக்கு, குறிப்பாக அடித்தட்டு மக்களுக்கு நல உதவிகள் செய்து வருவதில் சொன்னதைச் செய்து காட்டுபவர் எங்கள் கேப்டன். இது பொதுமக்கள் அனைவருக்கும் தெரிந்த விஷயமே. அதனால் எங்கள் கேப்டன் தலைமையேற்கின்ற புதிய அரசியல் கட்சிக்கு மக்கள் ஆதரவு அமோகமாக இருக்கும்!'' என்று கூறினார் மாநில அமைப்புச் செயலாளர்களில் ஒருவரும், திருச்சி மாவட்டத் தலைவருமான கொ. தங்கமணி.

மாநிலப் பொதுச்செயலாளரான ராமு வசந்தன், “நேற்று வரையில் (3.9.2005) எங்களிடம் பதிவு செய்து கொண்டுள்ள



* மாநாட்டுத் திடலின் முகப்புத் தோற்றம்



* கே. சசிகலா



* கே. தங்கமணி



* ந. கணேசன்



* கே. அலாவுதீன்

மன்றங்கள் நாற்பதாயிரம். அதன் உறுப்பினர்கள் நாற்பது லட்சம் பேர். ஒன்றியம் வாரியாக எத்தனை வண்டிகள், எவ்வளவு நபர்கள் மாநாட்டுக்கு வருபவர்கள் என்று கணக்கெடுக்கப்பட்டு வருகிறது. அதனால் மாநாட்டுக்கு எத்தனை லட்சம் பேர் வருவார்கள் என்று தற்போது கூற இயலாது. ஆனால் தமிழக அரசியல் மாநாடுகளிலேயே, இது போன்றதொரு கூட்டம் கூடியது இல்லை என்று சொல்லுமளவுக்குக் கூட்டம் கூடும் என்பது மட்டும் நிச்சயம்!'' என்றார்.

மாநாட்டு பாதுகாப்புக்கென மாவட்டந்தோறும் இளைஞர்கள் தேர்வு செய்யப்பட்டு, 'தொண்டர் படை' என சுமார் அறுநூறு நபர்களுக்குப் பயிற்சியளிக்கப்பட்டுள்ளது. முன்னாள் ராணுவ வீரர்கள் ஐந்து பேர் அடங்கிய குழு ஒன்று அவர்களுக்கு சென்னையில், ஆண்டாள் அழகர் திருமண மண்டபத்தில் பயிற்சி தந்துள்ளது. மாநாட்டு முகப்பினை ஆர்ட் டைரக்டர் கன்னியப்பன் வடிவமைத்திருக்கிறார். நுழைவு வாயிலின் ஒருபுறம் இன்றைய தமிழகத்தின் சில காட்சிகளும், மறுபுறம் நாளைய தமிழகத்தின் சில காட்சிகளும் வரையப்பட்டுள்ளன.

''மாநாடு அறிவிப்புக்குப் பின்னர், பல கிராமங்களுக்குச் சென்று வந்திருக்கிறோம். பெண்கள் மத்தியில் எங்கள் கேப்டன் துவங்கவிருக்கும் அரசியல் கட்சிக்கு நல்ல வரவேற்பு இருக்கிறது. எங்கள் ஒரு மன்றத்திலேயே நானூறு பெண்கள் உறுப்பினர்களாகச் சேர்ந்திருக்காங்கன்னா பார்த்துக்கங்க!'' என்று நம்மிடம் குறிப்பிட்டனர், மதுரை, திருநகர் மகளிரணித் தலைவி எஸ். சியாமளாதேவி, மகளிரணிச் செயலாளர் ஏ. சாவித்திரி ஆகிய இருவரும்.

* எஸ். சியாமளாதேவி



* ஏ. சாவித்திரி



சரி, மக்கள் என்ன நினைக்கின்றனர்?

''விஜயகாந்த் போல புதுமுகம் அரசியலுக்கு அவசியம் வரணும்ங்க. ஏழை, எளிய மக்களுக்கு நல்லது செய்யணும்னு நெனைக்கறவரு ஆட்சிக்கு வந்தாத்தானே, எங்களைப் போல சாதாரண ஜனங்களோட கஷ்ட நஷ்டம் தீரும்?'' என்றார், மதுரையில் முப்பது வருடங்களாக சைக்கிள் ரிக்ஷா ஓட்டி வரும் ந. கணேசன்.

''தான் புதுசா அரசியல் கட்சி ஆரம்பிக்கப் போறதுக்காக தன்னோட சொத்தை வித்து (அவரே சொன்னது தான்!) செலவு செஞ்சு ஒரு மாநாடு நடத்தப் போறாரு நடிகர் விஜயகாந்த். திரை (சினிமா) கடலோடி தேடிய திரவியத்தை இப்படி வீணா விரயம் பண்ணிக்கிட்டு இருக்காரு. பொதுமக்களுக்கு நல்லது செய்யறவர்னா, வருஷா வருஷம் செஞ்சிக்கிட்டு வர்றாரு இல்லே, அந்த உதவிகளை இன்னும் கொஞ்சம் அதிகமா செஞ்சுட்டுப் போகலாமே. அவருக்குப் பதவி ஆசை வந்துடுச்சு. அதான் அரசியலுக்கு வர்றாரு. இன்னைக்கு அரசியல்ங்கிறது ஒரு வியாபாரமே தான். போட்ட பணத்தை அப்புறமா பன்மடங்கா எடுத்துக்கிடுவாங்க. இதுதாங்க நடக்கப் போவுது. இவரு ஆரம்பிக்கப் போற அரசியல் கட்சி, தமிழ்நாட்டுல இன்னொரு வோட்டுப் பொறுக்கி அரசியல் கட்சியாத்தாங்க இருக்கப் போவுது!'' என்று அடித்துச் சொன்னார், மதுரையில் பெரியார் பேருந்து நிலையம் அருகே காபி பார் நடத்தி வரும் கே. அலாவுதீன்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



## செய்திகள் வாசிப்பது... சின்னான்




# 'அண்ணன்' காந்தி!

சம்பத்துல காந்தியைப் பார்த்தேன். அண்ணல் காந்தி இல்லீங்கோ, இது திருவாரூர் 'அண்ணன் காந்தி!' இவருக்கு தங்கச்சி சசிகலா மேல அன்லிமிடெட் பாசம்! அதான் 'தங்கையே - உனது பாசமே எனது சுவாசம்'னு ஒரு குட்டிக் கவிதை பொஸ்தகம் போட்டிருக்காரு. 'தல, இந்தா நீயும் படிச்சுப் பாரு'ன்னு எனக் கொண்ணு கொடுத்தாரு! கவிதை எப்படி இருக்குன்னு கேக்காதீங்க, வரிகளா முக்கியம், வரிவரியா வாரி இறைச்சிருக்குற பாசம்தான் முக்கியம். 'திருப்பதில மெயின் சன்னதில வெளக்கணைஞ்சி போச்சு. அதனால ஊர்ல இருக்கிற எல்லா அண்ணாச்சிகளும் தங்கச்சி பேருல கவிதை பொஸ்தகம் போடணும்'னு ஏதாவது பிரஸ்காரங் கௌப்பி விடாம இருந்தா சரிதான்!

'எல்லாரும் நெறைய கொழந்த பெத்துக்கோங்க' - இப்படி ரொம்பக் கவலையா ஒருத்தர் அறிக்கை விட்டிருக்காரு! 'யாருப்பு'ன்னு கேக்கறீங்களா, நம்ம வாடிகன் போப்புதான்! 'சுப்ரமணிய சாமி' மேல சத்தியமா சொல்லுறேன், இந்த மெஸேஜ் நம்ம நாட்டுக்காரங் களுக்கு இல்லீங்கோ! இத்தாலி, ஸ்பெயின்ல எல்லாம் பிறப்பு விகிதம் கொறைஞ்சு போச்சாம். அதான் போப்பு இப்படி ஒரு அறிக்கை விட வேண்டிய தாப் போச்சு!

கேரளா தாமரைச்சேரில இருக்காரு நம்ம மன்மதன் ஜாபர். எல்லாருக்கும் காயின் கலெக்‌ஷன், ஸ்டாம்ப் கலெக்‌ஷன் இப்படி ஹாபி இருக்கறாப்ல, நம்ம ஜாபருக்கும் ஒரு ஹாபி இருந்துருக்கு! அது 'வொய்ஃப் கலெக்‌ஷன்!' கடந்த சில வருஷங்கள்ல சுபைதா, ஜெமீலா, இன்னொரு ஜெமீலா, சைனபா இப்படி வளைச்சு வளைச்சு ஏமாத்தி கல்யாணம் பண்ணியிருக்காரு. அஞ்சாவதா 'சபிரா'ன்னு ஒரு பொண்ணைப் பாக்கப் போனப்ப, அந்தப் பொண்ணுக்கு ஜாபர் மேல டௌட் வர, அது போலீஸ் கம்ப்ளெயிண்டா மாற, இப்ப ஜாபர் இருக்குற இடம் 'மாமியார் வீடு!'

போன வாரம் சென்னை ஃபுல்லா வைகோ ஜெயிலுக்குள்ள உக்காந்தாப்ல போஸ்டர்ல போஸ் கொடுத்துக்கிட்டிருந்தாரு! என்னான்னு உத்துப் பாத்தா அவரு ஜெயில்ல உக்காந்து எழுதுன புக்ஸையெல்லாம் வெளியிடப் போறாருன்னு தெரிஞ்சுது. சரி, சிறையில எழுதுனதை சிறையிலதான் வெளியிடுவார்ன்னு நேர சென்ட்ரல் ஜெயிலுக்கு வண்டிய வுட்டேன். பாத்தா ஃபங்ஷன் அங்க இல்லியாம். என்னய்யா லாஜிக் இது! ஏமாந்து திரும்பிட்டேன்.



**ரா**ஜனின் போன் சிணுங்கியது. நான் சரியான நேரத்துக்கு சாங்கி விமான நிலையத்தை அடைந்துவிடுவேனா என்ற சந்தேகம், ஒரே மணி நேரத்தில் அவருக்கு இரண்டாவது முறையாக வந்திருந்தது. "அரைமணி நேரம் முன்னாடியே போயிடுவேன். கவலையே வேண்டாம். ஆமா 'திருமதி. லீலா'ன்னு கொட்ட கொட்டயா அட்டையில எழுதி எடுத்துக் கிட்டேன். நோ ப்ராப்ளம், பை" என்றதுமே துண்டித்து விட்டார்.

மூச்சுவிடவும் நேரமில்லாமல் ஓடிக் கொண்டேயிருக்கும் சிங்கப்பூர்காரர்களுக்குக் குழந்தை, குடும்பம் ஆகியவற்றை விடவும் அந்த ஓட்டமே பிரதானமாகியிருந்தது. பணத்தை விட்டெறிந்து நேரத்தை வாங்கத் தலைப்பட்டுவிட்டனர். அதனால்தான் 'எனி சர்வீஸ்' ஒரே வருடத்தில் பதினொரு ஊழியர்களுக்கும் கணிசமான போனஸ் கொடுக்கும் அளவுக்கு வளர்ந்திருந்தது. ஒரு நாள் மளமளவென்று ஆபீஸுக்குள் நுழைந்தார் ஓர் ஆண். தன் மனைவி மிகவும் 'பிஸி'. ஆகவே ஒரு வாடகைத் தாய் தேவையென்றார். தன் தொலைபேசி எண்ணைக் கொடுத்துவிட்டுப் போய்விட்டார். பாஸ் ஒரு மாதமாய் அந்தத் தம்பதியருக்குப் பிள்ளை பெற்றுக் கொடுக்கவென்று வாடகைத் தாயைத் தேடிக் கொண்டிருக்கிறார்.

நாயைக் குளிப்பாட்டி பிரஷ் செய்துவிட, வீட்டு மளிகை வாங்க, வீட்டிலுள்ள திரைச் சீலைகளையெல்லாம் அகற்றித் துவைத்து, மறுபடியும் மாட்டிவிட என்று எதற்கும், எல்லாவற்றிற்கும் மக்களுக்கு நேரப் பற்றாக் குறையிருந்தது. பணம் அள்ள அள்ளக் குறைவேயில்லாமல் இருக்கும் இவர்கள், இவ்வேலைகளுக்காக எங்களிடம் வந்தனர். சொல்லியழத் தோள் கொடு, காது கொடு என்றெல்லாம் கூடத் தொலைபேசியிலழைத்து, நேரம் சொல்லிக் கூப்பிடுவார்கள். வேலையைப் பொருத்தும், சேவையைப் பொருத்தும் கட்டணங்களை பாஸ் தீர்மானிப்பார்.

**போ**ன வாரம் ஒரு தொலைபேசியழைப்பு வந்தது. பாஸ்தான்



பதினைந்து வயதில் ஒரு பெண்ணுக்கு இவ்வளவு கவலைகளா என்று வியக்கும்படியிருந்தது எனக்கு. குறைந்தது இரண்டு வருடங்களாகப் பெற்றோரிடம் பேச நினைத்துப் பேசாமலேயே மனதுக்குள் உறங்கிக் கொண்டிருந்த அத்தனையும் வெளியேறின. இறுதியில் அப் பெண்ணின் முகம் பிரகாசமாகியிருந்தது.

ஒரு வாரம் முன்பே ராஜன் 'எனி சர்வீஸ்' கதவைத் தட்டித் தன் விசித்திரமான கோரிக்கையை வைத்திருந்தார். மெர்ஸிடிஸ் பென்ஸ் காரில் வந்திறங்கினார். "நானும் என் வொய்ஃபும் ரொம்ப பிஸி. ஒருத்தர் இந்தியாவிலிருந்து 'டிரான்சிட்'ல வராங்க. அவங்கள 'ரிஸீவ்' பண்ணி, அஞ்சு மணி நேரம் அவங்ககூட இருக்கணும். மறுபடியும் 'ஏர் இந்தியா' விமானத்துல கலிஃபோர்னியாவுக்கு அவங்க கிளம்பற வரைக்கும் கூட இருந்தா போதும்."

"சரி, அவங்க யாரு? என்ன பேரு? என்ன வயசு? எந்த ஃப்ளைட்ல வராங்க? எத்தனை மணி வரைக்கும் கம்பெனி குடுக்கணும்? எந்த மாதிரி உதவியெல்லாம் தேவையாயிருக்கும்? இந்த மாதிரி விவரங்கள்லாம் தேவை. இந்த ஃபார்ம்ல ஃபில் பண்ணுங்க" என்று சொல்லி என்னைப்



# சேவை

## ஜெயந்தி சங்கர்

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2005ல் பிரசுரத்துக்குத் தேர்வான கதை**

எடுத்தார். அழைத்தது ஒரு தந்தை. அவருக்கும் அவரது துணைவியாருக்கும் தங்களின் வர்த்தகத்தைக் கவனிக்கவே நேரமில்லை. ஆகவே, அவர்களது பதினைந்து வயதுப் பெண்ணின் பிரச்னைகளையெல்லாம் காது கொடுத்துக் கேட்க வேண்டும். 'ஒரு ஜோடிக் காது கிடைக்குமா' என்று கேட்டார். "ரவியின் இரு காதுகளையும் அனுப்பிவைக்கிறேன்" என்று கூறிவிட்டு பாஸ் போனை வைத்தார். மஞ்சள் முகத்தில் ஒரு மகிழ்ச்சியின்மை. கேட்க ஆள் கிடைத்ததும், அந்தப் பெண் ஒரேயொரு நிமிஷம் தயங்கிவிட்டுப் பிறகு கொட்டித் தீர்த்துவிட்டாள்.

பார்த்துக்கொள்ளச் சொல்லிவிட்டு, பாஸ் அடுத்து வந்த தொலைபேசியழைப்பைக் கவனிக்கச் சென்றுவிட்டார்.

வரப்போகும் மூதாட்டிக்கு ஆங்கிலம் தெரியுமென்றாலும்கூட, ஓர் இந்திய ஊழியரையே அனுப்ப விண்ணப்பித்திருந்தார். ராஜனின் முக்கிய எச்சரிக்கை, 'விமான நிலையத்தில் திருமதி லீலாவைத் தவறவிடக் கூடாது. அப்படி நான் அவரைக் காணத் தவறினால், கையிலிருக்கும் ராஜனின் முகவரியை டாக்ஸி ஓட்டுனரிடம் காட்டி, நேராகச் சென்று ராஜனின் வீட்டுக்




# படிச்சவங்க பாராட்டுறாங்க!

'கல்கி' மருத்துவ மலரை பரிசோதனை நிலையத்தில் பாதாதிகேசம் ஸ்கேன் செய்து பார்த்தால், இவ்விதழை இத்தனை ஆரோக்கியமாக வெளியிடுவதற்காக மேற்கொண்ட பயிற்சிகளும் முயற்சிகளும் எக்ஸ்ரேபோலத் தெரியும்.

சாதாரண இருமல், தும்மலில் ஆரம்பித்து புற்றுநோய் வரை, அவரவர் தலைவிதியைப் பொறுத்து அழையா விருந்தாளிகளாக நுழையும் நோய்களை, கத்தியின்றி ரத்தமின்றி விரட்ட முயல்வதற்கு ரூ.25/- செலவில் இந்தக் கையேட்டை அளித்திருப்பது ஒரு எனர்ஜி ட்ரீட்மெண்ட்! தலைவலி வருமுன் குடிக்கக் கிடைத்த சூடான டிகிரி காபி! 'உடம்பைப் பார்த்துக்கோ' என்று வெறும் உபசார வார்த்தையை மட்டும் கேட்டுப் பழகியவர்களுக்கு எப்படிப் பார்த்துக்கொள்வது என்று அறிவுரை வழங்குகிறது இந்த கல்கி மருத்துவ மலர்.

- ஜே.எஸ். ராகவன்,
சென்னை

கதவைத் தட்டிவிடுவார். அவர் தங்களின் வீட்டுக் கதவைத் தட்டிவிடாமல் இருக்கத்தான் 'எனி சர்வீஸின் உதவியையே நாடியிருந்தார்.

அதிசயமாக இந்திய விமானம் சரியான நேரத்துக்குத் தரையிறங்கியிருந்தது. வெளியேறிய பயணிகளில் நடுத்தர வயதைக் கடந்த இந்தியப் பெண்மணியைத் தேடினேன். ராஜன், எடுத்துப் பல வருடங்களாகியிருந்த ஒரு நிழற்படத்தைக் காட்டியிருந்தார். 'அதில் இருப்பதைப் போல இப்போது இருக்க மாட்டார்' என்றும் எச்சரித்திருந்தார்.

வெளிர் நீலச் சேலையணிந்து, தளர்ந்த கொண்டையுடன், தோளில் ஒரு பயணப் பையும், மறுகையில் ஒரு பணப் பையுமாக தூரத்தில் வந்து கொண்டிருந்தவர்தான் திருமதி லீலாவாக இருக்க முடியுமென்று தோன்றியது. அவர் கண்களில் நன்றாகப் படும்படி அட்டையைக் கொஞ்சம் பலமாக ஆட்டிவிட்டு, அவரது உயரத்திற்குப் பிடித்தேன். அவர் அட்டையைப் பார்த்து என்னை நோக்கி வந்தார்.

"நீங்க திருமதி லீலாவா?" என்றதும் ஆமென்று தலையசைத்தார். "என் பெயர் ரவி. நான் ராஜன் கீழ் வேலை செய்றேன். அவர் எனக்கு நல்ல நண்பர்."

ராஜன் சொல்லச் சொன்ன பொய்கள் ஒவ்வொன்றாக என் வாயிலிருந்து உதிர்ந்ததை உணர்ந்து, எனக்கே என் மேல் ஆச்சரியம் பிறந்தது. "ரெண்டு பேருமே கொழந்தைங்களக் கூட்டிக்கிட்டு பினாங்குக்குப் போயிருக்காங்க. இந்த 'ட்ரிப்' முன்னாடியே ப்ளான் பண்ணினது. அதனால கேன்சல் பண்ண முடியல. அதான் பாவம், வேற வழியில்லாம என்னை உங்களுக்கு கம்பெனி குடுக்க அனுப்பியிருக்காங்க. உங்ககிட்ட விளக்கிச் சொல்லிப் புரிய வைக்கச் சொன்னாங்க" என்றதுமே, "ராஜன் வருவான்னு நெனச்சேன். போன்லயாவது அவனோட பேசலாமா?" என்று குழந்தையின் ஆர்வத்தோடு கேட்டார் திருமதி லீலா.

'இணைப்பு கொடுக்கக் கூடாது, பேச விருப்பமில்லை' என்ற ராஜனின் எச்சரிக்கை நினைவு வந்தது. "இல்ல, அவங்க போன் எடுத்துக்கிட்டுப் போகல. இதை

யும்கூடச் சொல்லச் சொன்னாங்க. கவலைப்படாதீங்க. நான் அவர்கிட்ட சொல்றேன். வர்றீங்களா, ஒரு கப் காபி சாப்பிடலாம்'' என்று பேச்சை மாற்றினேன்.

''நானே உங்கிட்ட கேக்கணும்னு நெனச்சேன், ஒரு காபி சாப்பிடணும்னு. அதுக்கு முன்னால குளிக்கணும் ரவி. ஒரே கசகசன்னு இருக்கு. இங்கே குளிக்க வசதியிருக்கா?''

''ஓ. இருக்கே!'' என்றபடி குளியலறைகள் இருக்கும் இடத்துக்கு அழைத்துச் சென்றேன்.

''பரவாயில்லையே! இவ்வளவு வசதிகள் இங்கேயே இருக்கும்போது, யார் வீட்டுக்கும் போய் தொந்தரவு பண்ண வேண்டாம் இல்ல?'' என்றார். எனக்கு இலேசாக திடுக்கென்றது. ராஜனின் குட்டு வெளிப்பட்டுவிடுமோ?

''என்னோட பைய நீ பார்த்துக்கோ. நான் சீக்கிரமே வந்துடறேன். வா, போன்னு நான் உன்னக் கூப்பிடலாமில்ல? எப்படியும் நீ என்னோட கடைசி மகளைவிடச் சின்னவனாத்தான் இருப்ப. அவளோட பிரசவத்துக்குத்தான் யூ.எஸ். போறேன். முதல் பிரசவம்'' என்றபடி உட்கார்ந்திருந்த இருக்கையிலிருந்து எழுந்து கொண்டார். பையிலிருந்து தனக்கு வேண்டிய சோப்பு, துண்டு, மாற்று உடை எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு, அங்கு வரிசையாக இருந்த குளியலறைக்குள் சென்று மறைந்தார்.

இருபது நிமிடங்கள் ஓடியபின் திருமதி. லீலா குளியலறையிலிருந்து வெளிப்பட்டார்.

''ஆன்ட்டி, உங்களுக்கு வேற ஏதும் சாப்பிட வேணாமா? மேல ஒரு இட்டாலியன் ரெஸ்ட்ராரெண்ட் இருக்கு. ரொம்ப நல்லா இருக்கும். வேணாப் போவோமே.''

''இல்ல எனக்குப் பசிக்கல. தாகமாத்தான் இருக்கு. காபியே போதும்'' என்றதும் 'காஃபெடேரியா' நோக்கி நடந்தோம். ''ரவி, பார்க்கத்தான் நான் இன்னுனு இருக்காப் போல இருக்கும். ஆனா, எனக்கு ஆர்த்ரைடிஸ் ப்ராப்ளமுண்டு'' என்றவரிடம், குற்ற உணர்ச்சியுடன், ''ஓ, ஐ'ம் சாரி ஆன்ட்டி. நான் ரொம்ப வேகமா நடந்துட்டேன். மெதுவாவே நடப்போம். ஒண்ணும் அவசரமில்ல'' என்றேன், நடையின் வேகத்தைக் குறைத்தபடி.

பேசிக்கொண்டே வந்தார் திருமதி லீலா. தன் மூத்த மகளுடன் சென்னையில் வசிக்கிறாராம்.

**கா**பிக்குச் சர்க்கரை போட்டுக் கொள்ளாமல், கொஞ்சம் கொஞ்சமாக பாதிக் கோப்பை வரை பேசாமல் குடித்தார். பிறகு ஏதோ நினைவு வந்தவராகத் தன் தோள் பையைத் திறந்தார். அதில் வெவ்வேறு அளவுகளில் பொட்டலங்கள். அவற்றை வேறு ஒரு பிளாஸ்டிக் பையில்



- குட்டிப் பிரசன்னா

போட்டு என்னிடம் நீட்டி, ''எலவடாம், கடுகு மாங்கா, வெங்காய வத்தல்... இதெல்லாம் நானே செஞ்சது. ஒரு பாட்டில் மாகாளிகூட இருக்கு. ராஜனுக்குப் பிடிக்கும். இதயெல்லாம் அவங்கிட்ட நானே என் கையால கொடுப்பேன்னுதான் நெனச்சேன். பரவால்ல, நீயே கொடுத்துடு. பேரப்பிள்ளைக ரெண்டு பேரையும் பார்க்க முடியாதது வருத்தம்தான். பார்த்து கிட்டத்தட்ட ஒன்னரை வருஷமிருக்கும். ராஜனையும் ரேஷ்மியை

# Mr.மெட்ராஸ்








யும் கூடப் பாக்கணும்னு ஆசையாயிருந்தேன். ரெண்டு வாரம் முன்னாடி போன்லகூட ஊருக்குப் போகற விவரம் சொல்லல. அதான் வெளிய வரும்போதே அவனோட முகத்தையே தேடிக்கிட்டு வந்தேன். ராஜன் எனக்கு ஒரே சன்."

"என்ன, ராஜன் உங்க மகனா?" என்று நாக்கு நுனிவரை வந்த கேள்வியை நல்லவேளையாக தக்க தருணத்தில் அடக்கிக் கொண்டேன்.

அடப்பாவி, சொந்தத் தாயா? யாரோ தூரத்துச் சொந்தமென்றல்லவா சொன்னான் அந்த ராஜன் அன்று!

**ச**மார் மூன்று மணிக்கு 'ஏர் இந்தியா' பயணிகளுக்கு முதல் அழைப்பு விடுக்கப்பட்டது. திருமதி. லீலா என் முகத்தைப் பார்த்தார். "பரவாயில்லை. இன்னும் நேரமிருக்கு. என்னோட போன் நம்பர் எழுதிக் கொடுக்கறேன். எப்போ இந்தியா திரும்பறீங்களோ, அப்போ நான் வரேன். நேரமிருந்தா உங்கள எங்க அக்கா வீட்டுக்குக் கூட்டிட்டுப் போறேன்" என்று ஒரு காகிதத்தில் என் முகவரி மற்றும் போன் நம்பர்களை எழுதிக் கொடுத்தேன்.

"உனக்கெதுக்கு வீண் சிரமம்? வரும்போது ராஜன் இருப்பான். அவன் வந்து கூட்டிட்டுப் போவான். முடிஞ்சா உனக்கு போன் பண்றேன். பார்ப்போமா... ஆமா, ராஜனை உனக்கு எத்தனை நாளா தெரியும்?" விடை எதிர்பாராத கேள்வியை உதிர்த்துவிட்டுக் கையசைத்துச் சென்றார். அவரது நம்பிக்கையும் பாசமும் அப்படியே இருக்கட்டுமே!

ராஜனின் குட்டையுடைத்து அதன் மூலம் அந்தத் தாயின் இதயத்தையும் உடைக்க ஏனோ எனக்கு மனமே வரவில்லை.

மொபைல் கவனத்தை ஈர்த்தது. ராஜனின் அழைப்பு மறுபடியும்! இத்தனை முறை போனில் என்னோடு பேச முடிகிற இவனால், பெற்றவளுக்காக நேரத்தை ஒதுக்கவும், வீட்டுக்கு அழைத்துப் போகவும் முடியவில்லை. ஹார்ட்லெஸ் ஃபூல்! "ஹலோ, ரவி, அவங்களுக்காக நீங்க ஏதும் செலவு செஞ்சா அதுக்கெல்லாம் நான் பொறுப்பில்ல... முன்னாடியே சொல்லியிருக்கேன் ஞாபகமிருக்கில்ல? இதுதான் என்னோட கடைசி கால். உங்களுடைய சேவைக்கான கட்டணத்துக்கு என்னோட ஆபீஸுக்கு பில்ல அனுப்பினா, ஒரே நாள்ல செக் அனுப்பிடறேன், சரியா" என்றதும்,

"செலவென்ன சார், பெரிய செலவு? பணத்த நீங்களே வச்சிக்கோங்க. பாஸ்கிட்டவும் சொல்லிடறேன். இதுக்கு நான் 'சார்ஜ்' பண்ணப் போறதில்ல. குட்பை" என்று பட்டென்று சொல்லிவிட்டு இணைப்பைத் துண்டித்தேன். எனக்குத்தான் அம்மா இல்லை. நிழலில் இருக்கும் ராஜன், வெயிலில் இருக்கும் என் அளவிற்கு நிழலின் அருமையை உணர்ந்திருப்பாரா என்ன?!

## ராகுல் காந்தியிடம் கேட்கக் கூடாத பத்து கேள்விகள்!

1. ஃபாரினுக்குப் போய் அப்பா படிச்ச 'பாடத்தை'த்தான் நீங்களும் படிச்சீங்களாமே, உண்மையா?'
2. தமிழகத்துல உங்க லேட்டஸ்ட் ஃப்ரெண்ட்ஸ் ஸ்டாலின், அன்பு மணிதானாமே?
3. சோனியாவை 'அம்மா'ன்னு கூப்பிடுவீங்களா, 'அன்னை'ன்னு கூப்பிடுவீங்களா?
4. எம்.பியானதுலேர்ந்து 'எனக்கொரு கேர்ள் ஃப்ரெண்ட் வேணா மடா'ன்னு பாய்ஸ் படப் பாட்டை எல்லார்கிட்டயும் உல்டா பண்ணிப் பாடுறீங்களாமே?
5. 'புது'ச் செயலாளரா எப்ப மாறப் போறீங்க?
6. 'சிங்'கங்களுக்கு உங்களைப் பார்த் தாலே அலர்ஜியாமே...?
7. பால்தாக்கரே இன்னமும் உங்களுக் குப் பெண் பார்த்துக்கிட்டுத்தான் இருக்காரா?
8. நிஜமான தனிக்குடித்தனம் எப்போ ஜி?
9. பிரியமா என்ன கொடுத்து, அக்கா அரசியலுக்கு வரவிடாம தடுத் துட்டீங்க?
10. தமிழ்நாட்டுக்கு வந்தா தனியா சந்திக்கறது வாசனையா? இளங்கோவனையா?



# போட்டுத் தாக்கு!

பரமு

# கிருபாலனி தாத்தா!

**யாணன்**



தினமும் இரண்டு, மூன்று தடவையாவது கிருபாலனி தாத்தாவைப் பார்த்து விடுவேன். வயது அறுபதுக்குமேல் என்றாலும், சுறுசுறுப்பாக டி.வி.எஸ் பிஃப்டியில் சுற்றிக் கொண்டிருப்பார். முன்னால் ஒரு குட்டிப் பையனை உட்கார வைத்து ஓட்டிக்கொண்டு போவார்.

எனது மகன் படிக்கும் பள்ளியில்தான், அந்தக் குட்டிப் பையனும் படிக்கிறான். காலையில் எனது மகனை பள்ளியில் விடச் செல்லும் போது, அவரும் வண்டியில் வருவார். விஷ் பண்ணிக் கொள்வோம்.

கோயில், பார்க், ஓட்டல் போன்ற இடங்களிலும் இருவரையும் ஜோடியாய்ப் பார்ப்பேன். என்னை எங்கே சந்திக்க நேர்ந்தாலும் தாத்தா கைதூக்கி 'வணக்கம்' சொல்லுவார். பேரனிடமும் "அங்கிளுக்கு ஹலோ சொல்லு" என்று கூறுவார்.

என்ன ஆனதோ தெரியவில்லை... இரண்டு மாதமாய் அவர்களை ஸ்கூலிலோ, வெளியிடங்களிலோ சுத்தமாய்ப் பார்க்கவே முடியவில்லை. நானும் அவர்களை இயல்பாய் மறந்தே போனேன்.

அன்று ஜி.ஆர்.டி. தெருவில் ஒரு நண்பரைப் பார்க்கச் சென்றேன். அந்தத் தெரு எனக்குப் புதிது. அட்ரஸ் விசாரிப்பதற்காகக் கதவு திறந்திருந்த ஒரு வீட்டின் காலிங்பெல்லை அழுத்தினேன்.

"யாரது?" என்றபடியே வெளியே வந்தது... அட, கிருபாலனி தாத்தா!

"அடடே ஸாரா? வாங்க வாங்க" பலமாய் வரவேற்றார். என்னைப் பரவசமாய் அழைத்தாலும், அவரது முகத்தில் பழைய பொலிவு இல்லை. சவரம் பண்ணாமல் தாடி வளர்ந்திருந்தது.

நாற்காலியில் அமர்ந்ததும் கேட்டேன்... "பேரனோடு வண்டியிலேயே சதா சுத்திக்கிட்டே இருப்பீங்க... ரெண்டு மாசமா கண்ணுலயே படலயே.. உடம்பு ஏதும் சரியில்லையா?"

"பேரன் ஊருக்குப் போயிட்டான் ஸார். அவங்க அப்பாவுக்கு செங்கல்பட்டுக்கு டிரான்ஸ்ஃபர். அவன் போனதுலேர்ந்து வண்டியை வெளியில எடுக்கவே பிடிக்கல" என்றார்.

"இதுக்குப் போயி ஏன் இவ்வளவு கவலைப் படணும். நீங்களும் செங்கல்பட்டுக்குப் போயிட வேண்டியதுதானே.. இல்ல உங்க கூடவே வச்சி வளர்க்க வேண்டியதுதானே?" என்றேன்.

தூணுக்குப் பின்னால் சோர்வாய் நின்றிருந்த கிருபாலனியின் துணைவியார் சொன்னார், "அவுங்க நாலு வருஷத்துக்கு முன்னே பக்கத்து வீட்டுக்குக் குடி வந்தவங்க. அவன் இங்க வந்துதான் பிறந்தான். இரண்டு பேரும் வேலைக்குப் போயிடுவாங்க. நாங்கதான் அவனை வளர்த்தோம். இனி முடியுமா?"

# அச்சம், மடம்

## கனிமொழி

# 7

இருட்டான அறைகளில்
பூதங்கள் இருக்கும் என்று
பாட்டி சொன்னாள்.

கதைகளில் உலவிய
பூதங்கள் நிறைத்தன
என் இரவுகளை.
தூக்கத்தில் துணி விலக
தடிப்பயல் என்றார்கள்
நளினங்கள் தேடி
வரித்துக் கொண்டேன்.

மாலை மசிவதற்குள்
கூடடையாவிட்டால்
கற்புக்குக் களங்கம்...
வாசல் தாண்டுவதைக்
குறைத்துக் கொண்டேன்.

அறிவைவிட அடக்கமே
அணிகலன்; அடங்கிப் போனேன்.

கைத்தலம் பற்றிய
கணவனின் கண்களில்
கனவுகளைத் தேக்கினேன்.

அவை நிறம் மாறுவது
கண்டு திகைத்துப் போகிறேன்.

வரையப்பட்ட வட்டத்துக்குள்
நானே உருவாக்கிய
அறைக்குள் இருந்தபடி.

ஓவியம்: மருது

பி.பி.சியில் நிருபராகப் பணியாற்றி அண்மையில் ஓய்வு பெற்றிருக்கும் சம்பத்குமார், மீடியாவில் முப்பத்தைந்து வருட அனுபவம் கொண்டவர். தமது பணிக்கால சுவையான நிகழ்வுகளை நம்மிடம் பகிர்ந்து கொண்டார்...

"பி.பி.சியில் இருந்தபோது மிகவும் நெருக்கடியான தருணங்களில் ஒரு நிருபர் எப்படிச் செயல்பட வேண்டும் என்று, பிரிட்டனின் பீட்டர்ஸ் பார்க்கில் ஒரு வார காலம் பயிற்சி அளித்தனர். விபத்து நேரத்தில் முதலுதவி அளிப்பது தொடங்கி, கண்ணி வெடிகளைப் புதைத்துள்ள பகுதிகளில் எப்படிப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்பது வரை, பல விஷயங்களையும் சொல்லிக் கொடுத்தனர். கடைசி நாள், இரண்டு இந்தியர்கள் உள்பட பத்துப் பேர் கொண்ட எங்கள் குழுவை ஒரு ஜீப்பில் ஏற்றிக் கொண்டு, ஒரு காட்டுப் பகுதிக்குள் அழைத்துப் போனார்கள்.

## "நடுக்காட்டில் பயங்கர ஆயுதங்களுடன் தாக்கினார்கள்!"

# வீரப்பனால்

நடுக்காட்டில், திடீரென்று பயங்கரமான ஆயுதங்களுடன் சிலர் தோன்றி, எங்கள் குழுவினரை கடுமையாகத் தாக்கினார்கள். ஜீப்பின் கண்ணாடி தூளானது. எங்கள் உடம்பில் கண்ணாடிச் சில்லுகள் பட்டு ரத்தம். நாங்கள் அனைவரும் ஜீப்பிலிருந்து வெளியில் இழுத்துத் தள்ளப்பட்டோம். என் முகம் அடிவாங்கி வீங்கிவிட்டது. தாக்கின கும்பல் சிறிது நேரத்தில் ஓடி மறைந்தது. நாங்கள் பயிற்சி மையத்துக்குத் திரும்பினோம். சிகிச்சை தரப்பட்டது. நாங்கள் எங்களது பயங்கரமான அனுபவங்களை மற்றவர்களுக்குச் சொல்லிக் கொண்டிருந்தபோது, அந்த அறையில் இருந்த திரையில் ஒரு வீடியோ படம் ஆரம்பித்தது.

அதில், காட்டுக்குள் எங்களைத் தாக்கிய காட்சி பதிவாகி இருந்தது. எங்களுக்கு ஒரே ஆச்சரியம்! பயிற்சி அதிகாரி, "உங்கள் மீது நடந்தது ஒரு செட்அப் தாக்குதல்" என்றபோது எங்களுக்கு இனிய ஷாக்! தாக்குதலின் போது, நாங்கள் ஒவ்வொருவரும் எப்படி நடந்து கொண்டோம் என்று சுட்டிக் காட்டி; அதில் என்ன தவறு, நாங்கள் எப்படி நடந்து கொண்டிருக்க வேண்டும்? என்று விளக்கிச் சொன்னார். பி.பி.சியின் பயிற்சி முறை எங்களை பிரமிக்க வைத்தது.

ஒரு காலத்தில் பி.பி.சி. தமிழோசை மீது விடுதலைப் புலிகளுக்கு பெரும் மதிப்பு உண்டு. மனித உரிமை மீறல்கள் குறித்த நிகழ்ச்சித் தயாரிப்புப் பணிக்காக விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டில் இருந்த பகுதிகளுக்குச் சென்றிருந்தேன். அவர்களது விருந்தோம்பும் பண்பு என்னை ஆச்சரியப்பட வைத்தது. கால்களை இழந்து விட்டாலும், வாயிலுக்கே வந்து என்னை வரவேற்றார் புலிகள் இயக்க முக்கியப் பொறுப்பாளரான தமிழ்ச்செல்வன்.

அப்பகுதியில் குழம்பியகம், வெதுப்பகம் (பேக்கரி) என்று தூய தமிழ்ப் பெயர்களைக் காண முடிந்தது. ஒரு சிறுவனை "பள்ளிக்கூடம் போகிறாயா?" என்று கேட்டபோது, "இல்லை" என்றான். "வேறு என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டேன். "இங்கே பிறந்துவிட்டு, சண்டைக்குப் போகாமல் இருக்க முடியுமா?" என்று அவன் பட்டென்று பதில் சொல்ல, எனக்கு பயங்கர ஷாக்!

சில வருடங்களுக்கு முன்பு நக்கீரன் கோபால் மூலமாக, எனக்கு வீரப்பனிட

மிருந்து ஒரு ஆடியோ கேஸட் வந்தது. அதில் வீரப்பனே பேசியிருந்தான்.

"சம்பத் ஐயாவுக்கு வணக்கம்!" என்று ஆரம்பித்து, நான் தொடர்ந்து பி.பி.சி. தமிழோசை நிகழ்ச்சியைக் கேட்டு வருவது பற்றியும், வீரப்பன் குறித்து நான் அனுப்பி, பி.பி.சியில் ஒலிபரப்பான செய்திகள் மற்றும் பிரிட்டிஷ் டீ.விகள், வீரப்பன் விவகாரம் குறித்து என் கருத்துகளைக் கேட்டன. அதற்காக எனக்கு ஐந்நூறு பவுண்டு வரை சன்மானம் கிடைத்தது என்பது ஆச்சரியமான நிஜம்!



# கிடைத்த சன்மானம்!

பற்றியும் குறிப்பிட்டிருந்தான். "உங்க ரிப்போர்ட்ஸ்ல நான் 130 மனிதர்களையும், ஆயிரத்துக்கும் அதிகமான யானைகளையும் கொன்னிருக்கேன்னு சொன்னீங்க! ஆமாம்! நான் கொன்னிருக்கேன்! ஏன் கொன்னேன் தெரியுமா?" என்று கேட்டுவிட்டு, நீளமான தன்னிலை விளக்கம் அளித்திருந்தான்.

நான் லண்டனில் இருந்தபோது, வீரப்பன் ராஜ்குமாரைக் கடத்திய சம்பவம் நிகழ்ந்தது. அது லண்டனின் பிரபல கார்டியன், இன்டிபென்டென்ட் உட்பட பல இதழ்களிலும் முக்கியச் செய்தியாக வெளியானது. அமெரிக்க

லண்டனைச் சேர்ந்த டாகுமென்டரி பட டைரக்டர் ஒருவர், தாம் மாறு வேஷத்தில் வீரப்பன் காட்டுக்குள் புகுந்து, அவனையும், மற்றவர்களையும் சந்தித்துப் பேசி, டாகுமென்டரி படம் எடுக்க விரும்புவதாகவும், தமக்கு உதவ வேண்டும் என்றும் கோரினார். நான், "அது ரொம்ப ரிஸ்க். நீங்கள் வீரப்பனிடம் மாட்டிக் கொள்வீர்கள்; அல்லது அதிரடிப் படையிடம் சிக்கிக் கொள்வீர்கள். எனவே இந்த வீண் முயற்சியில் இறங்காதீர்கள்" என்று அறிவுரை சொன்னேன். மனசே இல்லாமல் வீரப்பன் பற்றிய டாகுமென்டரி எடுக்கும் எண்ணத்தைக் கைவிட்டார் அந்த மனிதர்."

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

ஓர் ஊரில் பழைய காலத்துக் கோயில் ஒன்று இருந்தது. அந்தக் கோயி லில் பழுப்பு நிறத்தில் ஒரு பெரிய உலோ கச் சிலை பல வருடங்களாக இருந்து வந் தது. அது ஓர் அழுக்குப் படிந்த கற்சிலை என்றுதான் பலரும் நினைத் துக்கொண்டிருந்தார்கள். அந்த ஊருக்கு ஒரு நாள் ஸ்வாமிஜி ஒருவர் விஜயம் செய்தார். அவர் அந்தச் சிலை யைப் பற்றி விசாரித்தார். "பல வருடங் களுக்கு முன்னால் நான் இந்த ஊருக்கு வந்திருந்தபொழுது, இந்த இடத்தில் தங்கச் சிலைதானே இருந்தது? அது என்ன ஆனது? அந்த இடத்தில் இந்த புதுச் சிலையை வைத்தது யார்?" என்று ஏகப் பட்ட கேள்விகளைக் கேட்டார். யாருக் கும் பதில் தெரியவில்லை. கோயில் சம்பந் தப்பட்டவர்கள் கூடி ஆலோசனை செய் தார்கள். பழைய தங்கச்சிலை என்ன



# கண்ணன்

ஆயிற்று என விசாரணை நடத்தினார்கள். ஊரில் பல ரையும் விசாரித்தார்கள். யாருக்கும் எதுவும் தெரிய வில்லை.

'என்ன செய்வது?' என்று அந்த ஸ்வாமிஜியையே கேட்டார்கள். அவர் மிகுந்த ஆலோசனைக்குப் பிறகு ஓர் உளியை எடுத்துக் கொண்டு வரச் சொன் னார். ஸ்வாமிஜி என்ன செய்யப் போகி றார் என அனைவரும் ஆவலுடன் எதிர் பார்த்துக்கொண்டிருந்தனர். உளியைக்

கையில் எடுத்த ஸ்வாமிஜி, சிலையின் மீது அதை வைத்து இலேசாகக் கீறிப் பார்த்தார். பின் இலேசாகத் தட்டினார். மேலே இருந்த பழுப்பு நிறம் அகன்றது.



நாம் யார் என்பது நமக்குத் தெரிவதே இல்லை. இறை நம்பிக்கையுடன் கூடிய பண்பாடு, ஒழுக்கம் போன்ற நற்குணங்களால், நாம் நம்மை உரசிப் பார்க்க வேண்டும். தினம் தினம் உரசிப் பார்க்க வேண்டும். அப்படிச் செய்து வந்தால் நம் மனம் பக்குவப்படும். மன அமைதியைத் தேடி நாம் எங்கும் போக வேண்டிய அவசியம் இருக்காது. நிரந்தரமாக அது நமக்குள்ளேயே இருக்கும். அதனால் நம்முடைய திறமைகள் மேலும்

# உணர்த்திய கலை!

உள்ளே தங்கச் சிலை தகதகத்தது. "அட! இத்தனை நாளும் இங்கே ஒரு தங்கச் சிலை இருந்திருக்கிறது. ஆனால் நமக்கு அது தெரியாமல் போய்விட்டதே!" என ஊர் மக்கள் எல்லோரும் வியந்தனர்.

அந்த ஊர் மக்கள் சிலை விஷயத்தில் எப்படி இருந்தார்களோ, அது மாதிரி தான் நாம் எல்லோருமே நம் விஷயத்தில் இருந்து கொண்டிருக்கிறோம். நம்மை நாமே உரசிப் பார்த்துக் கொள்ளாதவரை, பளிச்சிடும். அதன் காரணமாக இன்னும் நன்றாக உழைக்க ஊக்கம் கிடைக்கும். இன்னும் நிறையப் பணம் சம்பாதிக்க முடியும். மன மகிழ்ச்சியோடு வாழ்க்கை நடத்த முடியம். மனநிறைவான வாழ்க்கை வாழ முடியும். உங்களுடைய சுதந்திரம் எதையும் இழக்காமல், திருப்தியான வாழ்க்கை

சுனந்தாஜி

அமையும்.

மனக்குழப்பம். இதுதான் பலரது பிரச்னை. நம்மைப் போன்ற மனிதர்களுக்கு இது வருவது வெகு சகஜம் என்று நான் சொல்லுவேன். மகாபாரதத்தில் அர்ஜுனனுக்கே இந்தப் பிரச்னை வருகிறது. அதுவும் எங்கே? எங்கே மனது குழப்பம் எதுவும் இல்லாமல் ரொம்பவும் தெளிவாக இருக்க வேண்டுமோ, அந்த இடத்தில் வருகிறது. எந்த இடத்தில்? குருக்ஷேத்திரத்தில், போர்க்களத்தில்!

போர் புரிவது க்ஷத்ரிய தர்மம். போர்க்களத்தில் வீரத்துடன் போரிட்டு எதிரிகளை வீழ்த்துவது ஒரு போர் வீரனின் கடமை. ஆனால் அர்ஜுனனுக்கோ போரிடத் தயக்கம். 'களத்தில் எதிரில் இருப்பவர்கள் அனைவரும் எனது சகோதரர்கள், உற்றார், உறவினர்கள். எனது மரியாதைக்கு உரியவர்களான பீஷ்மர், துரோணாச்சாரியார் ஆகியோர் இப்போது எதிர்ப்பக்கத்தில். இவர்களை எதிர்த்து எப்படிச் சண்டை போடுவது? கௌரவர்கள் என்னோடு ஒன்றாக வளர்ந்த சகோதரர்கள் ஆயிற்றே! என்னதான் போர்க்களம் என்றாலும் அவர்களை எப்படி என்னால் சண்டையிட்டுக் கொல்ல முடியும்?' இப்படியாக மிகவும் குழம்பிப் போயிருந்தான் அர்ஜுனன்.

"இவர்களை எல்லாம் கொன்று குவிப்பதன் மூலம்தான் எங்களுக்குரிய நாடு எங்களுக்குக் கிடைக்கும் என்றால், அப்படி ஒரு நாடு எங்களுக்குத் தேவையில்லை. போரில் பலரது உயிரை பலி வாங்குவதன் மூலம் கிடைக்கிற நாடு எங்களுக்கு எப்படி சந்தோஷத்தைக் கொடுக்கும்?" என்று உணர்ச்சிவசப்பட்டான் அர்ஜுனன். குழப்பமான மன நிலையில், அர்ஜுனனுக்கு ஏராளமான சந்தேகங்கள். எல்லாவற்றையும் கொட்டித் தீர்த்தான் அர்ஜுனன். "எனக்குப் போரும் வேண்டாம். வெற்றியும் வேண்டாம், நாடும் வேண்டாம். கிருஷ்ணா! என்னை விட்டுவிடு. நான் இங்கிருந்து இக்கணமே ஓடிப்போய் விடுகிறேன்" என்று புலம்புகிறான். அவனால் அறிவுபூர்வமாக சிந்திக்கவே முடியவில்லை. அந்த அளவுக்கு அர்ஜுனனுக்குப் பெரும் குழப்பம்!

**"போரும் வேண்டாம்!**

**வெற்றியும் வேண்டாம்!**

**ஓடிப்போகிறேன் கிருஷ்ணா!"**

இந்த இடத்திலே மிக முக்கியமான விஷயம் ஒன்றை நமக்குச் சொல்லிக் கொடுக்கிறார் பகவான் கிருஷ்ணர். ஏறத்தாழ பகவத்கீதையின் முதல் அத்தியாயம் முழுக்க அர்ஜுனன்தான் பேசுகிறான். தனது மனக்குழப்பத்தை விவரிக்கிறான். தன்னால் ஏன் இந்தப் போரில் பங்கேற்க முடியாது என்று எடுத்துச் சொல்லுகிறான். பகவான் கிருஷ்ணர், தன் வாய் திறந்து ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. அமைதியாக அர்ஜுனன் பேசுவதையே கேட்டுக் கொண்டிருக்கிறார். அடுத்தவர் பேசுகிறபோது, அவரை முழுமையாகப் பேசவிட வேண்டும். இடைமறித்து குறுக்கே பேசக் கூடாது. இவ்வாறு கவனமாகக் கேட்கும் ஆற்றலை ஒரு கலையாகவே பழகிக்கொள்ள வேண்டும். இதைத்தான் மேற்கத்திய நிர்வாக வியலில் ஆர்ட் ஆஃப் லிஸனிங் என்று குறிப்பிடுகிறார்கள்.

அர்ஜுனன் தெளிவாகச் சிந்தனை செய்ய முடியாத மனநிலையில், உணர்ச்சிவசப்பட்டு பேசிய எல்லாவற்றையும் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு, அப்புறம் பேச ஆரம்பிக்கிறார் பகவான். "அர்ஜுனன் யார்? அவனுடைய கடமை என்ன? மன உறுதியுடன், சுய விருப்பு, வெறுப்புகளை விலக்கிவிட்டுத்

தன் கடமையைத் தட்டிக் கழிக்காமல் செய்து முடிக்க வேண்டியதின் அவசியம் என்ன? இந்தப் போர் வெறும் மண்ணை மீட்கும் போர் இல்லை; தர்மத்தை நிலை நாட்டும் யுத்தம். இந்தப் போரில் ஜெயிப்பதனால் பாண்டவர்களுக்குச் சந்தோஷம் கிடைக்கப் போகிறது என்ற காரணத்துக்காக நீங்கள் இங்கே வரவில்லை. தர்மம் காக்கப்பட வேண்டும் - அது உங்கள் கடமை. அதை நிறைவேற்றுவதற்காகவே பாண்டவர்கள் படை திரட்டிக் கொண்டு வந்திருக்கிறீர்கள்" என்று அர்ஜுனனுக்குக் கடமையினை உணர்த்துகிறார் கிருஷ்ணர்.



இப்படிப்பட்ட தத்துவ உண்மைகள்தான் இந்தப் பாரம்பரியம் மிகுந்த பாரத நாட்டின் சொத்துகள். அமெரிக்காவுக்கோ, அரபு நாடுகளுக்கோ சென்றால் நிறையப் பணம் சம்பாதிக்கலாம். இந்திய ரூபாயில் இல்லாமல் அயல்நாட்டு கரன்சியிலேயே கோடி கோடியாகச் சம்பாதிக்கலாம். கார், பங்களா என்று மிகுந்த வசதிகளுடன் வாழ்க்கை நடத்தலாம். அதற்காக நீங்கள் டாக்டராகவோ, இன்ஜினீயராகவோதான் இருக்க வேண்டும் என்ற கட்டாயம் கிடையாது. அங்கே டாக்சி ஓட்டினாலும் சரி, அல்லது தெருக் கூட்டுபவராக இருந்தால் கூடப்போதும். அங்கே என்ன வேலை செய்து சம்பாதித்தாலும், இங்கே இருக்கிற அம்மா, அப்பாவும் மற்றவர்களும் ''என் பிள்ளை ஃபாரின் போய் நிறையச் சம்பாதிக்கிறான்'' என்று பெருமைப் பட்டுக் கொள்ளலாம். அவர்கள் விமான டிக்கெட் வாங்கி அனுப்பினால், ஒரு நடை அங்கே போய் ஊர் சுற்றிப் பார்த்துவிட்டுக் கூட வரலாம்.

நான் இதெல்லாம் வேண்டாம் என்று சொல்லவில்லை. எல்லாவற்றையும் அனுபவியுங்கள். சந்தோஷமாக வாழ்க்கை நடத்துங்கள். ஆனால் உங்கள் வேர்களை மறந்து விடாதீர்கள். மன நிம்மதியைத் தொலைத்து விடாதீர்கள். வீடு, பணம் போன்ற சொத்துகளைச் சேர்ப்பதைப் போலவே கொஞ்சம் ஆன்மிக சொத்துகளையும் சேர்த்துக் கொள்ளுங்கள் என்பதுதான் என் ஆலோசனை. ஆனால் அது அவ்வளவு சுலபமானது இல்லை. மிகக் கடுமையாக உழைக்க வேண்டும். பல நாட்கள் உழைக்க வேண்டும். நாம் இவ்வளவு உழைக்கிறோமே, இதற்கெல்லாம் ஏதாவது பலன் கிடைக்குமா? என எதிர்பார்ப்பு வைத்துக்கொள்ளக் கூடாது; இதற்கெல்லாம் மேலாக, முழுமையான ஈடுபாட்டுடன் சந்தோஷமாக உழைக்க வேண்டும்.

(வெற்றி தொடரும்)

# ஷேக்ஸ்பியர் காப்பி அடித்தாரா?

ஷேக்ஸ்பியரை எத்தனை முறை தோண்டினாலும், ஒவ்வொரு முறையும் ஏதாவது புதிதாகக் கிடைத்துக் கொண்டேதானிருக்கிறது. கட்டாயம் கிடைக்கும் என்ற தைரியத்தில்தான், இலக்கிய ஆராய்ச்சியாளர்கள் தோண்டிக் கொண்டிருக்கிறார்கள். சமீபத்திய மூன்று தோண்டல்கள் ஷேக்ஸ்பியரை வம்புக்கு இழுத்திருக்கின்றன.

முதல் புத்தகம் ஜேம்ஸ் ஷேப்ரியோ எழுதியது (1599: A Year in the Life of William Shakespeare). கொலம்பியாவில் ஆங்கில புரொபஸராக இருக்கிறார் ஷேப்ரியோ. இரவு பன்னிரண்டரை மணிக்கு எழுப்பினாலும், ரோமியோ ஜூலியட்டை அடி பிறழாமல் ஒப்பிப்பவர். இவர் கண்டுபிடித்திருக்கும் புதிய சேதி இதுதான். ஷேக்ஸ்பியர் தமது நாடகங்களை எழுதுவதற்காக நயா பைசா கூடச் செலவு செய்யவில்லை. அதாவது எந்தப் புத்தகத்தையும் அவர் காசு கொடுத்து வாங்கவில்லை. இரவல் வாங்கும் நல்ல பழக்கமும் அவரிடம் இருந்ததில்லை. பிறகு, எப்படி வாசித்தார்? லண்டன் புத்தகக் கடைகளுக்குச் சென்று ஜன்னல் வாங்கல் (தமிழில்: 'விண்டோ ஷாப்பிங்') செய்து, தேவைப்படும் குறிப்புகளை சாமர்த்தியமாகக் கடத்தி வந்திருக்கிறார்.

(ஓர் இடைச் செருகல்: ஷேக்ஸ்பியர் தமது உயிலில் தம் மரணத்திற்குப் பிறகு, தமது கட்டில், தட்டு, கத்தி, கபடா, மோதிரம் போன்றவை யார் யாருக்குப் போய்ச் சேர வேண்டும் என்பதை அட்டவணை போட்டு எழுதியிருக்கிறார். ஆனால் தமது புத்தகங்களைப் பற்றி மூச்சுக்கூட விடவில்லை. ஒரு வேளை ஷேப்ரியோ சொல்வது சரியாகக் கூட இருக்கலாம்.)




அடுத்த புத்தகம் க்ளேர் அஸ்குவித் (Clare Asquith) என்பவர் எழுதியது. தலைப்பிலேயே நிறைய மர்மம் (Shadowplay: The Hidden Beliefs and Coded Politics of William Shakespeare). இருப்பதிலேயே இவர் தோண்டல்தான் ஆழமானது. ஷேக்ஸ்பியர் வாழ்ந்த காலத்தில், ப்ராடஸ்டென்ட் பிரிவினர்தான் ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருந்தனர். ஷேக்ஸ்பியரோ ஒரு கத்தோலிக்க ஆதரவாளர். வெளிப்படையாக கத்தோலிக்க நம்பிக்கைகளை ஆதரித்தால் எங்கே பிரச்னை வந்துவிடுமோ என்று நினைத்த ஷேக்ஸ்பியர், ரகசிய சங்கேத மொழியில் கத்தோலிக்கக் கருத்துகளைத் தமது நாடகங்களிலும் கவிதைகளிலும் பதிவு செய்தாராம். ஷேக்ஸ்பியர் ஒன்றும் லேசப்பட்ட ஆள் கிடையாது என்கிறார் க்ளேர். உதாரணத்திற்கு, தி மெர்ச்சன்ட் ஆப் வெனிஸ், தி டெம்பஸ்ட் போன்ற நாடகங்களை எடுத்துக் கொண்டால், கத்தோலிக்கர்களின் வழிபாட்டு முறை, அவர்களது மத நம்பிக்கை போன்ற பல விஷயங்களைத் தெரிந்து கொண்டு ஆச்சரியப்படலாம் என்கிறார் க்ளேர். இந்த நாடகங்களில் அடிக்கடி வரும் High, Fair போன்ற சொற்கள் கத்தோலிக்கர்களையும் Low, Dark போன்றவை ப்ராடஸ்டன்ட்

பிரிவினரையும் குறிக்கின்றன என்கிறார் க்ளேர். அப்படியா என்று யாரிடம் போய்க் கேட்பது?

இவர்கள் எல்லாரையும் விட ஒரு படி மேலே போய், ஷேக்ஸ்பியர் உண்மையில் ஷேக்ஸ்பியரே அல்ல என்பவர் மார்க் ஆண்டர்சன். (இப்படிச் சொல்பவர்களின் குழு ஒன்று தனியாக இயங்கிக் கொண்டிருக்கிறது. ஷேக்ஸ்பியர் வேறு யாரோ ஒருவருடைய கவிதைகளை காப்பி அடித்து எழுதினார் என்று



இவர்கள் இன்றளவும் சாதிப்பார்கள்.) தம் புத்தகத்திற்கு ஒரு முழத்திற்குக் குறையாமல் தலைப்பு வைத்திருக்கிறார் ஆண்டர்சன். முழ அளவு சரியாக இருக்கிறதா என்று அளந்து பார்த்துக் கொள்ளலாம். 'Shakespeare' by Another Name: The Life of Edward de Vere, Earl of Oxford, the Man Who Was Shakespeare. கைகளில் கற்பூரத்தை ஏந்திக் கொண்டு இவர் செய்யும் சத்தியம் இது தான்: ஷேக்ஸ்பியர் என்று நாம் நினைத்துக் கொண்டிருப்பவர் உண்மையில் 'எட்வர்ட் வெரே' என்பவர் தான். ஆனால் கற்பூரத்தைத் தவிர வேறு பலமான ஆதாரங்களை இவர் காட்டவில்லை.

நேரம் கிடைத்தால் நாம் கூட ஷேக்ஸ்பியரை சற்றுத் தோண்டலாம். ஷேக்ஸ்பியர் காபி குடிப்பாரா, டீ குடிப்பாரா? 'கூகில்' இல்லாத காலத்தில் எப்படி இவ்வளவு கடினமான வார்த்தைகளைத் தேடிப் பிடித்தார்? பின்னொரு காலத்தில் மனப் பாடச் செய்யுளில் வந்து மாணவர்களை இம்சிக்கப் போகிறோம் என்கிற உண்மை அவருக்குத் தெரிந்திருந்ததா? தம் சமகால கவிஞர்கள் யாருக்காவது அணிந்துரை எழுதிக் கொடுத்திருக்கிறாரா? பூதக் கண்ணாடி கொண்டு பார்த்தால் ஏதாவது துப்புக் கிடைக்கலாம்.

**- மருதன்**

# சிக்டேன்னா ணைசபர்!

"நான் எடுக்கற படம் நல்லா ஓடுமா ஜோசியரே?"

"ஓ... படம் வெளிவந்து ரெண்டு வருஷம் கழிச்சு, தடை செய்யப்படுற வாய்ப்பு இருக்கே!

- அம்பை தேவா



"என்னை மதிச்சு யார் பத்திரிகை கொடுத்தாலும் கண்டிப்பா நான் கல்யாணத்துக்குப் போயிடுவேன்..."

"உங்க வீட்டுல இவ்வளவு ஜோடி செருப்பு இருக்கும்போதே நினைச் சேன்!"

- சீர்காழி வி. ரேவதி





"எந்தத் தைரியத்துல அந்த ஆபீஸ்ல பட்டப்பகல்ல நீ திருடப் போன...?"

"எல்லாரும் தூங்கிட்டிருப்பாங் கன்ற தைரியத்துலதான் சார்..."

- வி. சாரதி டேச்சு



''மன்னா... உங்க மூளையும் வாளும் ஒண்ணு...''

''ரெண்டுமே ரொம்பக் கூர் மையா இருக்கா...?''

''ம்ஹூம்... ரெண்டை யுமே நீங்க பயன்படுத்துறதே இல்லை...!''

- தஞ்சை தாமு

''கபாலி வீட்டு வாசல்ல 'சன்டேன்னா சைபர்'னு போட்டுருக்கே...ஏன்?''

''ஞாயிற்றுக்கிழமைன்னா யாருக் கும் மாமூல் தர மாட்டானாம்!''

- அம்பை தேவா





''நீங்க இப்ப மூணாயிரம் ஜெயிச்சுட்டீங்க! உங்க மனநிலை எப்படி இருக்கு?''

''மூணு மாச வீட்டு வாடகை பாக்கி. அதை முதல்ல ஒழிச்சுக் கட்டணும் சார்!''

- வே. முருகேசன்

தெலுங்குப் படவுலகில் இப்போது நம்பர் ஒன் நாயகி நம்ம ஊர் த்ரிஷா. அந்த இடத்தைக் கைப்பற்றும் முயற்சியில் முக்கால் கிணறு தாண்டிவிட்ட ஸ்ரேயா, 'மழை' படத்தின் மூலம் மறுபடியும் தமிழுக்கு வருகிறார். முதல் படம் 'எனக்கு இருபது உனக்குப் பதினெட்டு'. பதினெட்டு நாட்கள்கூட ஓடாத படுதோல்விப் படம்.

"தெலுங்கிலும் நான் அறிமுகமான 'இஷ்டம்' தோல்விப் படம்தான். இரண்டாவது படம் 'சந்தோஷம்'. அதிலிருந்து இப்போ வரைக்கும் சூப்பர் டூப்பர் ஹிட்ஸ்தானே? அதேமாதிரி 'மழை'யும் சூப்பராய் ஜெயிக்கும் பாருங்க" என்று லாஜிக் பேசும் இந்த அழகிய மின்னலுக்குச் சொந்த ஊர் டெல்லி. "ஹரித்துவாரில் பிறந்தேன். டெல்லி பப்ளிக் ஸ்கூலில் படிச்சேன். அப்புறம் மும்பைக்கு ஷிப்ட் ஆனோம். ஒரு கதக் டான்ஸராகணும்ங்கிறதுதான் என்னோட லட்சியம். ஆனால் சினிமா இழுத்துக்கிட்டு வந்துடுச்சி... தாங்க்ஸ் டு ராஜீவ்மேனன்ஜி" என்று ஆழ்வார்பேட்டை இருக்கும் திசைநோக்கி கைகூப்புகிறார்.

'சல்பி க்யூம் ஹவா' என்ற ஹிந்தி மியூசிக் வீடியோவில் ஸ்ரேயாவைப் பார்த்த ராஜீவ்மேனன், இரண்டு விளம்பரங்களில் நடிக்க வைக்க... அதைப் பார்த்து 'இஷ்டம்' தெலுங்குப் படத்துக்கு நாயகி வாய்ப்பு, தேடி வந்திருக்கிறது.

"தெலுங்குல பிஸியான பிறகு 'துஜே மேரி கஸம்', 'தோட தும்பதுலோ'ன்னு இரண்டு ஹிந்திப்படம் பண்ணிட்டேன்... ஆனாலும் ஆந்திரா, தமிழ்நாட்டு ரசிகர்கள் மனசுல இடம் பிடிக்கணும்" என்று சென்டிமென்ட் பேசும் ஸ்ரேயா கையில் 'Gone with the wind' புத்தகம். 'புத்தகம் தவிர மனிதர்களைப் படிப்பதும் பிடிக்கும்' எனும் இவருக்குப் பிடித்த மனிதர் யார் என்றால், அம்மாவையும் அவரது கதக் மாஸ்டர் ஷோபா நாராயணனையும் கைகாட்டுகிறார். ரொம்பப் பிடிச்ச நடிகை யாரென்றால் "மதுபாலா! யாரோடும் ஒப்பிடமுடியாத தேவதை அவர்" என்று இச் கொட்டுகிறார்.

மழை படத்தின் நாயகன் ஜெயம் ரவியோ "ஸ்ரேயாவைப் பார்த்தாலே மனசுக்குள் மழை பெய்கிறது. அப்படியொரு கூல் பர்ஸன்" என்று சிலாகிக்கிறார். பார்வைகள் பலவிதம். ஒவ்வொன்றும் ஒருவிதம்!

- ஸ்ரீ



# இடி... மழை... மி




நம்மளவு செளகரியமோ, அறிவோ, அழகோ இல்லாதவர்களைப் பார்த்து நாம் தாழ்த்தியாக நினைத்து கர்வப்படக் கூடாது. கர்வம் என்பது சொறி, சிரங்கு எல்லாவற்றையும்விடக் கொடிய பெரிய வியாதி போன்றது. போன பிறவியில் நம்மைவிடத் தப்பு செய்ததால் அவர்கள் இப்போது பணத்தில், புத்தியில், அழகில் நம்மைவிடக் கீழாக இருக்கலாம். ஆனால் நமக்கு கர்வம் வந்தால், இதுவே அவர்கள் செய்த தப்புகளையெல்லாம்விடப் பெரிய தப்பு. இதனால் நாம் அடுத்த பிறவியில் இப்போது அவர்கள் இருப்பதைவிடக் கீழான நிலையில் பிறப்போம்.

இன்னும் பலவிதமான அழுக்குகள் இருக்கின்றன. பிறர் இல்லாதபோது அவர்களைப் பற்றி கேலியாகவோ, நிந்தையாகவோ பேசுவதில் உங்களுக்கு எண்ணம் போகவே கூடாது. இப்படிப் பேசுவதில் ஒரு சுவாரஸ்யம் இருக்கிறதே என்பதற்காக இதில் ஈடுபடக் கூடாது. ஒருவனிடம் தப்பு தெரிந்தால், அதை நேரில் நல்லபடியாக, நயமாக, அன்பாக அவனிடமே சொல்ல வேண்டுமே ஒழிய, அந்தத் தப்பை மற்றவர்களிடம் சொல்லி சந்தோஷப்படுவது வெறும் கோழைத்தனம்தான். இப்படிப் புறங்கூறுகிறபோது அங்கே அந்தப் பையன் இல்லாதிருக்கலாம் - ஆனால் எங்கேயும் உள்ள ஸ்வாமி அங்கேயும் இருக்கிறார். என்றைக்கோ ஒருநாள் அவர் தண்டித்து விடுவார். அதற்கு யாரும் தப்ப முடியாது.

பொய், பயம், பொறாமை, நிந்தனை ஆகிய அழுக்குகளைப் போக்குகிற சோப்பு, சீயக்காய், அரப்பு, வாசனைப் பொடி மாதிரி சத்தியம், தைரியம், விட்டுக் கொடுக்கிற சுபாவம், இன்சொல் ஆகியன இருக்கின்றன.

இப்படியே நம் மன அழுக்கைப் போக்குகிற நல்ல குணங்கள் பல இருந்தாலும்கூட, வேறொரு ஜலம் இல்லாவிட்டால், இந்த நல்ல குணங்கள் மாத்திரம் நமக்கு மனத் தூய்மையைக் கொடுக்க மாட்டா. அந்த ஜலம்தான் தெய்வ பக்தி. எல்லா அழுக்குகளும் நீங்குவதற்கு கங்கா ஸ்நானமாக இருப்பது ஸ்வாமியிடம் செய்கிற பிரார்த்தனைதான்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

## தூரிகை... துப்பாக்கியாகிறது - பா. விஜய்

தூரிகையால்
துப்பாக்கியாக முடியுமென்றால்
துப்பாக்கியாலும்
தூரிகையாக முடியும்.
முடிந்திருக்கிறது.




ஒன்று - சமூகத்தைத் தீட்ட
மற்றொன்று - சமூகத்தைத் திட்ட!

பக்கம் - 96, விலை ரூ.50.00, குமரன் பதிப்பகம், 3, முத்துகிருஷ்ணன் தெரு, தி.நகர், சென்னை - 600 017

- மருதன்

## தொலைந்த காலம்
## - ஜி.ஆர்.சுரேந்தர்நாத்

ஏதோ கதை சொல்ல
வேண்டுமே என்று
ஏதோ சில
கதைகளைச் சொல்லவில்லை.
வாழ்க்கைப் பரப்பில்
தொலைந்து போகாமல்
மெதுவாய் மெதுவாய் மிதந்து வரும்
மெல்லிய சம்பவங்களைக்
கைப்பிடித்து, கரைசேர்த்து
பக்கங்களின் பக்கத்தில்
நிறுத்துகிறார் சுரேந்தர்நாத்.

பக்கம்- 136, விலை ரூ.40.00 - வானவில் புத்தகாலயம், 29/(7/3), 'E' 'பிளாக், முதல் தளம், மேட்லி சாலை, தி.நகர், சென்னை- 600 017.

## ரஜினி: சப்தமா சகாப்தமா?
## - ஜெ.ராம்கி

அரசியலில் ஆன்மிகம்
ஆன்மிகத்தில் அரசியல்
குழப்பமான முடிவுகள்
முடிவில்லாக் குழப்பங்கள்
ரஜினி -
சப்தமா? சகாப்தமா?
சகாப்தம்தான் என்கிறார் ஜெ. ராம்கி,
பெருத்த சப்தத்துடன்.

பக்கம் - 152, விலை ரூ.50.00, கிழக்கு பதிப்பகம், எண் 16, கற்பகாம்பாள் நகர், மயிலாப்பூர், சென்னை - 600 004.

**மேஷம்:** இந்த ராசிக்காரர்களுக்கு குரு பகவான் 19.9.2005 முதல் 7ம் இடத்தில் சஞ்சரிக்கப் போகிறார். இதனால் இதுநாள் வரை இருந்த கடன், பிணி, வழக்கு, சுப காரியத் தடைகள் போன்றவற்றை நிவர்த்தி செய்யப் போகிறார். நினைத்த காரியம் நிறைவேறும். ஆரோக்கியத் தொல்லைகள் நீங்கும். தீராத வழக்கு, வியாஜ்ஜியம் வெற்றி பெறும். கடன் தொல்லை விலகும். எதிரிகளால் இருந்த தொல்லைகள் விலகும். இதுநாள் வரை திருமணம் ஆகாமல் இருந்த ஆண், பெண்ணுக்குத் திருமணம் கைகூடும். வியாபாரத்தில் நல்ல மாறுதல், புதிய தொழில் துவங்கும் வாய்ப்பு வரும். உத்தியோகஸ்தர்களுக்கு வேலையில் முன்னேற்றம் கிட்டும். வேலை பளு குறையும். குடும்பத்தில் கணவன், மனைவி ஒற்றுமை பலப்படும். தனப் பெருக்கம் ஏற்படும். மனத்தில் தைரியமும், தன்னம்பிக்கையும் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றமும், தொழில் துவங்கும் வாய்ப்பும் ஏற்படும். மூத்த சகோதர - சகோதரிகள் மூலம் ஆதாயம் கிட்டும். கலைஞர்களுக்கு முன்னேற்றம் ஏற்படும். சிலருக்கு வெளிநாடு செல்லக்கூடிய வாய்ப்பு வந்து சேரும். புத்திர பாக்கியம் ஏற்படும்.

**ரிஷபம்:** ரிஷப ராசிக்காரர்களுக்கு குரு பகவான் 6ம் இடத்துக்குச் செல்லுகிறார். ஆறாம் இடம் என்பது சத்ரு, ரோக, கடன், வழக்கு ஸ்தானம் ஆகும். ஆதலால் எதிலும் கவனமுடன் செயல்படுவது நல்லது. சிலருக்கு உடல் ரீதியில் தொல்லைகள் இருக்கும். ஆதலால் உணவு கட்டுப்பாடு தேவை. தேவையற்ற வம்பு வழக்கு விவகாரங்கள் வீடுதேடி வரும். கடன் வாங்கி எதையும் செய்யாமல் இருப்பது நல்லது. யாருக்கும் ஜாமீன் போடுவது, கடன் கொடுப்பதைத் தவிர்க்கவும். கோர்ட்டு, வழக்கு வியாஜ்ஜியம் இழுபறி ஆகப் போகும். நெருங்கிய உறவினர்களுடன் மனக்கசப்பு வரும். குரு பார்வையால் திருமணத் தடை விலகிவிடும். உத்தியோகஸ்தர்கள் அவசரப்பட்டு இடம் மாற வேண்டாம். வியாபாரிகளுக்குத் தொழிலில் மந்தமான சூழ்நிலை இருக்கும். குடும்பப் பெண்கள் வாக்குவாதம் செய்வதைத் தவிர்க்கவும். கலைஞர்களுக்கு ஓரளவு நற்பலன் கிடைக்கும். மாணவ, மாணவிகள் படிப்பில் அதிக கவனமுடன் படிக்கவும். கணவன்- மனைவி விட்டுக் கொடுத்துப் போகவும். புதிய தொழில் துவங்கும் அன்பர்கள் நன்கு யோசித்துச் செய்யவும். குரு பகவானுக்கு வியாழன்தோறும் தீபம் ஏற்றவும். சிரமங்கள் குறைந்து நற்பலன் கிட்டும்.


ஸ்ரீ குருபகவான்

**மிதுனம்:** இந்த ராசிக்காரர்களுக்கு குருபகவான், 5ம் இடத்தில் சஞ்சரிக்கப் போகிறார். 5ம் இடம் என்பது புத்திர, பூர்வ புண்ணிய ஸ்தானம் ஆகும். ஆத

# குரு பெயர்ச்சிப் பலன்கள் 2005

## 'பக்கா' ஜோதிடர் தஞ்சை பரத்வாஜ்

லால் மனத்தில் நினைக்கும் காரியம் நடக்கும். பூர்வீகச் சொத்துகள் கைக்கு வந்து சேரும். நண்பர், உறவினர் மூலம் ஆதாயம் கிடைக்கும். குடும்பத்தில் சுபகாரியச் செலவுகள் ஏற்படும். திருமணம் ஆகாமல் இருப்பவர்களுக்குத் திருமணம் நடக்கும். புத்திர பாக்கியம் ஏற்படும். சிலருக்கு வீடு/வாகனம் வாங்கும்படி இருக்கும். இருக்கும் இடம், தொழில் செய்யும் இடம் போன்றவற்றில் இருந்த தொல்லைகள் விலகி நற்பலன் நடக்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. மனதில் சந்தோஷம் ஏற்படும். தாயாரின் உடல்நிலையில் நன்கு முன்னேற்றம் கிட்டும். புதிய தொழில் தொடங்க நல்ல காலம். வியாபாரிகளுக்குப் பொருளாதாரச் சிக்கல் விலகி வியாபாரத்தில் செழிப்பு ஏற்படும். கலைஞர்கள் நற்பலன் பெறுவார்கள். குழந்தைகள் வழியில் மகிழ்ச்சி தரும் சம்பவங்கள் நடக்கும். உத்தியோகஸ்தர்களுக்கு இதுநாள் வரை இருந்த வந்த கஷ்டங்கள் விலகி நற்பலன் நடக்கும். புதிய வேலை தேடும் நபர்களுக்கு நன்மைகள் நடக்கும். சிலருக்கு அயல்நாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். குடும்பப் பெண்களுக்கு ஆடை ஆபரண, அலங்காரப் பொருள்கள் சேரும். கணவன்-மனைவி உறவு நன்றாக இருக்கும்.

**கடகம்:** கடக ராசிக்காரர்களுக்கு குரு 4ம் இடம் செல்கிறார். இது வீடு, வாகனம், சுகம், தாயார், தொழில் போன்றவற்றைக் குறிப்பது. உறவினர்களால் கலகம் ஏற்படும். உடல் நிலையில் கவனமுடன் இருப்பது நல்லது. மாணவ, மாணவிகள் படிப்பில் அதிக கவனமுடன் இருக்கவும். சிலருக்கு வீடு, தொழில் செய்யும் இடத்தில் தொல்லைகள் இருக்கும். பொறுமையாக இருந்தால் வெற்றி பெறலாம். உத்தியோகஸ்தர்களுக்கு மாற்றம் ஏற்படும். சிலருக்கு கடல் கடந்து செல்லுபடியான சூழ்நிலை வரும். தாயாரின் உடல்நிலை பாதிக்கும். வண்டி, வாகனத்தில் செல்லும்போது கவனமுடன் செல்லவும். தொழில்துறையில் மந்தகதி இருக்கும். புதிய தொழில் தொடங்கும் நபர்கள் கவனமுடன் செயல்படவும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். திருமணம் ஆகாத நபர்களுக்குத் திருமணம் கைகூடும். அரசியல்வாதிகளுக்குச் சிரமமான காலம். குடும்பத் தலைவிகள் பொறுப்புடன் பணியாற்றுவது நல்லது. கணவன் - மனைவி விட்டுக் கொடுத்துச் செல்வது நல்லது. சிலருக்கு மகப்பேறு ஏற்படும். வியாழக்கிழமை தோறும் குரு பகவானுக்கு அர்ச்சனை செய்து, குரு காயத்ரி படித்து வருதல் நன்மை

தரும். ஆலங்குடி சென்று குருப்ரீதி செய்யவும். சகல கஷ்டங்களும் போகும்.

**சிம்மம்:** இந்த ராசிக்காரர்களுக்கு குரு தற்பொழுது 19.9.2005 முதல் 3ம் இடம் செல்லப் போகிறார். மூன்றாம் இடம் என்பது தைரியம், தன்னம்பிக்கை, ஆற்றல், வெற்றி, சகோதர சகோதரிகளைக் குறிப்பிடும் இடம் ஆகும். மூன்றாம் இடம் குருவுக்கு உகந்த இடம் அல்ல. '3ல் குரு வரும்போதுதான் வாலியே பட்டம் இழந்தான்' என்பது ஜோதிடப் பழமொழி. ஆகையால் மனத்தில் இதுநாள் இருந்த வந்த தைரியமும் தன்னம்பிக்கையும் குறைய ஆரம்பிக்கும். எடுக்கும் காரியம் ஒவ்வொன்றிலும் தோல்வி கிட்டும். எதிலும் பிடிப்பற்ற போக்கு இருக்கும். உடன்பிறந்தவர்களால் தொல்லைகள் வரலாம். ஆரோக்கிய ரீதியில் பாதிப்பு இருக்கும். நண்பர் உறவினர்களை நம்பி ஜாமீன் போடுவது கூடாது. மாணவ, மாணவியருக்கு படிப்பில் கவனம் தேவை. குரு பார்வை இருப்பதால் திரு மணத் தடைகள் விலக வாய்ப்பு உண்டு. குடும்பப் பெண்மணிகள் வாக்குவாதம் தவிர்க்கவும். திருமண தோஷம் விலகும். புண்ணிய ஸ்தலம் செல்வீர். வியாபாரிகள் ஓரளவு நற்பலனைப் பெறுவர். உத்தியோகஸ்தர்கள் அவசரப்பட்டு வேலை மாறுதல் செய்யக்கூடாது. பொருளாதாரப் பற்றாக்குறை இருக்கும். கடன் வாங்க வேண்டாம். வியாழன்தோறும் குருவழிபாடு, குருபகவான் அர்ச்சனை செய்து வரவும். கஷ்டங்கள் யாவும் போகும். குருகாயத்ரி படிக்கவும்.

• ஆஞ்சநேயர்



**கன்னி:** கன்னி ராசிக்காரர்களுக்கு இது நாள் வரை ஜென்ம ராசியில் சஞ்சாரம் செய்த குருபகவான், இனி 2ம் இடத்தில் சஞ்சரிக்கப் போகிறார். 2ம் இடம் என்பது தனம், வாக்கு, கல்வி, மேன்மை, கீர்த்தி, புகழ், குடும்பம் போன்வற்றைக் குறிப்பதாகும். ஆதலால் நினைத்த காரியம் ஒவ்வொன்றும் வெற்றி அளிக்கும். சுப காரியம் நடக்கும். கல்வி மேன்மை பெறும். பொருளாதார சிரமங்கள் போய் பண உதவி கிடைக்கும். குடும்பம் ஒன்றுபட்டு வாழும். குடும்பத்தில் நல்ல அந்தஸ்து ஏற்படும். வீடு/வாகனம் வாங்குவீர். திருமணக் காரியம் நடக்கும். நீண்டநாள் முடிவு பெறாமல் இருந்த வழக்கு, வியாஜ்ஜியம் வெற்றி அளிக்கும். வியாபாரிகளுக்குத் தொழிலில் பொருளாதார மேன்மை ஏற்படும். புதிய தொழில் துவங்கும் வாய்ப்பு வரும். மாணவ, மாணவியர் படிப்பில் முன்னேற்றம் அடைவார்கள். நீண்டநாள் எண்ணங்கள் நிறைவேறும். செல்வாக்கு ஏற்படும். பெயர், புகழ் தேடி வரும். புதிய முயற்சிகள் வெற்றி அளிக்கும். தாயார், மனைவி வழியில் நல்ல காரியங்கள் கைகூடும். சந்தான பாக்கியம் கிட்டும். குடும்ப வழியில் மேன்மை ஏற்படும். கலைஞர்கள் வெற்றி வாகை சூடுவார்கள்.

**துலாம்:** இந்த ராசிக்காரர்களுக்கு

இதுநாள் வரை அயன, சயன, விரய, மோட்ச ஸ்தானத்தில் இருந்த குருபகவான், 19.9.2005 முதல் ஜென்ம ராசியில் பிரவேசம் செய்யப் போகிறார். இதனால் இது நாள் வரை இருந்துவந்த கடன் தொல் லைகள், வீண் விரயங்கள், குழந்தைகள் பற்றின மனக்கவலை, உடன்பிறப்புகளு டன் இருந்த பகை உணர்வு, உடல் உபா தைகள் போன்றவை விலகிப் போகும். வழக்கு வியாபாரங்கள் வெற்றிப் பாதை யில் செல்லும். தீர்க்க முடியாமல் திணறிக் கொண்டிருந்த பிரச்னைகள், முடிவுக்கு வரும். சிலருக்கு மனைவியைப் பிரிந்து இடம் மாறுதல், வெளிநாடு செல்லுதல் போன்றவை நடக்கும். திருமணத் தடைகள் விலகி சுபகாரியம் நடக்கும். மாணவ, மாணவியருக்குப் படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். மனக்குழப்பம் போகும். கணவன், மனைவிக்குள் இருந்த கருத்து வேற்றுமை விலகும். எதிரிகளால் தொல்லை இருக்காது. மனதில் நினைத் தது நடக்கும். வராத பணம் கைக்கு வந்து சேரும். உத்தியோகஸ்தர்களுக்கு இருந்த பிரச்னைகள் தீரும். வியாபாரிகளுக்கு வியாபாரம் விறுவிறுவென்று நடக்கும். பொருளாதாரச் சிக்கல் வராது. குரு ப்ரீதி செய்து வரவும். ராகவேந் திர சுவாமி வழிபாடு நற்பலனை அளிக்கும்.



• ஸ்ரீ ராகவேந்திரர்

**விருச்சிகம்:** விருச்சிக ராசிக்காரர்களுக்கு குரு 12ம் இடத்தில் பிரவேசம் செய் கிறார். இந்த இடம் குருவுக்கு விரய ஸ்தானம் என்பதால், எல்லாம் சுப விரயங் களாக நடக்கும். குழந்தைகள் வழியில் இடமாற்றம் வரும். நெருங்கிய நண்பர் கள், உறவினர்கள் விலகிச் செல்வார்கள். கூட்டுத் தொழிலில் கூட்டாளிகள் விலகிச் செல்வார்கள். கொடுக்கல் - வாங்கலில் எச்சரிக்கையுடன் செயல்படுவது நல்லது. திருமணக் காரியம் கைகூடும். உடன்பிறப்பால் சகாயம் கிடைக்கும். வீடு, வாசல் வாங்கலாம். மாணவ, மாணவிகள் நற்பலனை அடைவார்கள். கண வன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். புத்திர பாக்கியம் ஏற்படும். வியாழன் தோறும் குருவுக்கு விளக்கு ஏற்றி, குரு காயத்ரி படித்து வரவும். நற்பலன் கூடும்.

**தனுசு:** இந்த ராசிக்காரர்களுக்கு 11ம் இடத்தில் குரு பிரவேசம் செய் கிறார். இதனால் ஜாதகருக்கு உத்தியோக, வியாபார ரீதியில் நல்ல முன் னேற்றங்கள் ஏற்படும். நண்பர், உறவினர் மூலம் ஆதாயம் ஏற்படும். சுப காரிய நிகழ்ச்சிகள் நடக்கும். படிக்கும் மாணவ, மாணவியர் நல்ல மதிப் பெண் பெறுவார்கள். சிலருக்கு சந்தான பாக்கியம் கிட்டும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். புதிய வீடு/வாசல்/வாகனம் வாங்கு வார்கள். உத்தியோகஸ்தர்களுக்கு வேலையில் ஊதிய உயர்வு, இடமாற்றம் ஏற்படும். திருமணத் தடை விலகி திருமணம் நடக்கும். புதிய தொழில் தொடங்க ஏற்ற காலம். நீண்ட நாள் கனவுகள் நிறைவேறும். கலை ஞர்கள் ஏற்றம் பெறுவார்கள். வெளிநாட்டு வர்த்தகத்தில் நன்கு மேன்மை கிட்டும்.

**மகரம்:** இந்த ராசிக்காரர்களுக்கு குருபகவான் 19.9.2005 முதல்



* மஹாகணபதி

10ம் இடத்தில் பிரவேசம் செய்யப் போகிறார். இது ஜீவனகர்ம தொழில் ஸ்தானம் ஆகும். ஆதலால் உத்தியோகஸ்தர்களுக்கு இடமாற்றம் வரும். வேலையில் பளு அதிகரிக்கும். சிலருக்கு விரும்பத்தகாத இழப்பு, மாற்றம் வரும். தேவை இல்லாத செலவுகள் ஏற்படும். சிலருக்கு கர்ம காரியங்கள் செய்யும் அமைப்பு இருக்கும். சொந்தத் தொழில் செய்பவர்கள் நிதானத்துடன் செயல்படுவது நல்லது. சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். மாணவ, மாணவிகள் படிப்பில் கவனமுடன் படித்தல் நல்லது. கணவன்- மனைவி உறவு நன்றாக இருக்கும். தாயாரின் உடல்நிலை பாதிக்கும். பொருளாதாரச் சிக்கல் இருக்கும். புண்ணிய ஸ்தலம் செல்லும்படி இருக்கும். ஆலங்குடி சென்று குருவுக்கு பரிகாரங்களைச் செய்து வருதல் அவசியம்.

**கும்பம்:** இந்த ராசிக்காரர்களுக்கு குருபகவான் 9ம் இடத்தில் பிரவேசம் செய்கிறார். இது தெய்வீக, பாக்கிய, பித்ரு ஸ்தானம் ஆகும். குருவின் சஞ்சாரம் நற்பலனை அளிக்கும். 'ஓடிப் போகிறவனுக்கு 9ம் இடத்தில் குரு' என்று சொல்வார்கள். ஆதலால் சிலருக்கு பிறந்த ஊரை விட்டு வெளிநாடு சென்று வாழக்கூடிய வாய்ப்பு வந்து அணுகும். பண வருவாய் மிகுதி ஆகும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். உத்தியோகத்தில் வருவாய் பெருகும். வேலை மாற்றம் கிட்டும். கணவன்- மனைவி இடையே இருந்த கருத்து வேற்றுமை விலகும். புதிய வீடு, வாகனம் வாங்கலாம். புதிய தொழில் செய்ய ஏற்ற காலம். குழந்தைகள் வழியில் சுபகாரியம் நடக்கும். எடுக்கும் காரியம் வெற்றி பெறும். கொடுக்கல் - வாங்கலில் சிக்கல் தீரும். படிக்கும் மாணவர்கள் நற்பலனைப் பெற்று அதிக மதிப்பெண்கள் வாங்குவார்கள். திருமணம் ஆகாத ஆண், பெண்களுக்குத் திருமணம் நடக்கும். சிலர் கோயில் அறப்பணிகள் செய்வார்கள். கௌரவப் பதவிகள் தேடி வரும். கலைஞர்கள் ஏற்றம் பெறுவார்கள்.

**மீனம்:** இந்த ராசிக்காரர்களுக்கு குருபகவான் தற்பொழுது 8ம் இடத்தில் பிரவேசம் செய்கிறார். குருவின் சஞ்சாரம் இந்த ராசிக்கு மட்டும் நற்பலனைத் தரும். 'நல்லவன் எட்டில் இருந்திடில் கிட்டிடும் ராஜயோகம்' என்னும் ஜோதிடப் பழமொழிக்கு ஏற்ப அற்புதமான பலன்களை அளிக்கப் போகிறார். அதனால் வேலை விஷயமாக வெளிநாடு செல்லக்கூடிய வாய்ப்பு வந்து சேரும். படிக்கும் மாணவ, மாணவியருக்கு அதிக மதிப்பெண் கிடைக்கும். சிலருக்கு சொத்து வாங்கும் யோகம், புதிய தொழில் செய்வதற்கு வாய்ப்பு கிடைக்கும். உடல் நலிவு நீங்கும். குடும்ப வாழ்வு இனிமையாக இருக்கும். பொருளாதாரப் பற்றாக்குறை தீரும். கொடுக்கல் - வாங்கல் நன்றாக இருக்கும். திருமணம் கைகூடும். குழந்தைப்பேறு இல்லாதவர்களுக்கு குழந்தை பாக்கியம் கிட்டும். வழக்கு, வியாஜ்ஜியம் வெற்றி அளிக்கும். வியாழன்தோறும் குரு காயத்ரி படித்து வருதல் நலம். ○




# அன்று டிரைவர்... இன்று தொழிலதிபர்!

சுற்றுலா மையமான கன்னியாகுமரியில் இன்றைக்கு மணியைத் தெரியாதவர்களை விரல் விட்டு எண்ணிவிடலாம். குமரியைச் சுற்றிப் பார்க்க வரும் மக்களுக்கு, களைப்பைப் போக்கி ஆறுதல் தரும் தங்கும் விடுதிகள் பலவற்றின் உரிமையாளரான மணி, தம் வாழ்க்கையை ஆரம்பித்தது டிரைவராக.

"நான் ஓட்டுநரா என் வாழ்க்கையை ஆரம்பிச்சப்போ, குமரியில அப்ப ஐந்து வாடகை வண்டிங்க மட்டும்தான் இருந்துச்சு. இங்க வர்ற சுற்றுலாப் பயணிகளுக்கு குமரியைத் தவிர்த்து தெரிஞ்ச இடமா இருந்தது சுசீந்திரம் கோயில், பத்மநாபபுரம் கோட்டை, அண்டை மாநிலமான கேரளாவோட தலைநகர் திருவனந்தபுரம் இவ்ளோதான். ரயில், பேருந்துன்னு நேரடி வசதிகள் திருவனந்தபுரத்துக்கு இல்லாத காலம் அது. வெளி மாநில சுற்றுலாப் பயணிங்க, அவங்க தாய்மொழியில பேசத் தெரிஞ்சவங்களை மட்டுமே நம்பி அப்போ பயணம் செய்வாங்க. தினம் திருவனந்தபுரத்துக்கு ட்ரிப் அடிச்சா நல்ல வருவாய் கிடைக்கும். இதை நான் சிறப்பா பயன்படுத்திக்

கிட்டேன். ராத்திரி, பகல்னு பாக்காம கடினமா உழைக்க ஆரம்பிச்சேன். தேவைகளைச் சுருக்கிக்கிட்டு சேமிக்க ஆரம்பிச்சேன். அப்போ என்னோட கனவா இருந்தது ஒரு சொந்த வீடு" என்று உள்ளம் பூரிக்கச் சொல்லும் மணியின் கனவு உண்மையில் நிறைவேறவில்லை. ஏனாம்...? இதோ அவரே தொடர்கிறார்...

''கொஞ்சம் கொஞ்சமா சேமிச்ச பணத்துல ஒரு மனை வாங்கி வீடு கட்ட நினைச்சு செயல்ல இறங்கினப்போதான், திடீர்னு என் மனசுல ஒரு மின்னல் கீற்று. அப்போ குமரியில தனியார் தங்கும் விடுதிங்க ஒண்ணோ, ரெண்டோத்தான் இருந்துச்சு. முன்னேறணும்ங்கற வெறியில




இருந்த எனக்கு, 'ஏன் இந்த இடத்துல ஒரு தங்கும் விடுதி கட்டி, முன்னேற்றத்தோட அடுத்த படியில அடியெடுத்து வைக்கக் கூடாது'ன்னு தோணுச்சு. உடனே முடிவெடுத்து வேலையில இறங்கிட்டேன்'' என்று கூறும் மணியிடம் ''அப்ப கனவு இல்லம்?'' என்றால், "பெருசா கட்டின விடுதி பக்கத்துல ஒரு ஓரமா சின்னதா கட்டிக்கிட்டேன்" என்று சிரிக்கிறார்.

"முதல் விடுதியை ஆரம்பிச்சு முப்பது வருஷமாகுது. திரும்பிப் பார்த்தா பிரமிப்பா இருக்கு. இன்னைக்கு பல விடுதிகள் கட்டிட்டேன். நேர்மையும் நாணயமும் பிசினஸ்ல ரெண்டு கண்கள் மாதிரி. உண்மையா உழைச்சா, அதுக்கேத்த பலன் ஒரு நாள் கிடைக்காமப் போகாது. ஹோட்டல் தொழிலைப் பொறுத்த வரைக்கும் வாடிக்கையாளர்களுக்கு நாம செய்யற சேவைதான் ரொம்ப முக்கியமானது. அவங்க கொஞ்சம்கூட முகம் சுளிக்காம பார்த்துக்கணும். தெரியாத ஒரு ஊருக்கு வர்ற சுற்றுலாப் பயணிங்களுக்கு தன்னோட வீடு மாதிரியான அபிப்ராயத்தை ஏற்படுத்தணும் விடுதிகள். அப்போதான் ஜெயிக்க முடியும். எப்போ வந்தாலும் தொடர்ந்து நம்ம ஹோட்டல்லயே தங்குவாங்க'' என்று மூச்சுவிடாமல் பேசும் மணி, பழசை மறந்து விடக்கூடாது என்கிற எண்ணத்தில், தாம் முதன் முதல் டிரைவராக இருந்த அம்பாசிடர் காரை, இன்றும் தமது தேவைகளுக்குத் தாமே டிரைவராக இருந்து பயன்படுத்தி வருகிறார்.

''சந்தோஷத்துலயே பெரிய சந்தோஷம், அடுத்தவங்களுக்கு உதவி செய்யறதுதான். என்னால முடிஞ்ச வரைக்கும் என்னோட தொழி

## பழசை மறக்காத மணி, தன் காரையும் மறக்கவில்லை!

லாளருங்கள சிறப்பா வச்சிருக்கேன். ஆயிரத்துக்கும் மேற்பட்டவங்க என்கிட்ட பணிபுரியறாங்க. ஒவ்வொருத்தரும் எனக்கு நல்ல பரிச்சயம். கடைக் கோடி ஊழியர்கூட எந்த நேரத்திலும் என்னை எளிதா சந்திக்க முடியும்ங்கற நிலைமைதான். முதலாளிக்கும் தொழிலாளிக்கும் இடைவெளியே இருக்கக் கூடாதுங்கறதுதான் என் ஆசை. காரணம், அதுதான் என்னை இன்னைக்கு உயரத்துல உட்கார வச்சிருக்கு''- ஓங்கி ஒலிக்கும் மணியின் குரலில், அவர்தம் தொழிலாளர்களின் மகிழ்ச்சி நம் கண்களுக்குத் தெரிந்தது.

- தாகூர்




# லஞ்சம்!

ஆர்.வசந்தகுமார்

பஸ்ஸிலிருந்து இறங்கியபோதே தமிழ்வாணனுக்குப் பசி வயிற்றைக் கிள்ளியது.

எதிரே இருந்த, சாரதா ராம் ஹோட்டலில், நுழைந்து சாப்பிட்டான். பீடா போட்டான்.

கிட்டத்தட்ட, பல ஏக்கர் கணக்கில் விரிந்து கிடந்தது அந்த நிறுவனம். அறிவியல் உபகரணங்களை சப்ளை செய்த வகையில், கிட்டத்தட்ட ஆறு லட்சங்கள் வர வேண்டி இருக்கிறது. சப்ளை செய்து நான்கு மாதங்களாகியும் 'செக்' வராததால், தமிழ்வாணனை நேரிடையாகவே போய், வாங்கி வரச் சொல்லி அனுப்பினார்கள்.

பலதடவை தொலைபேசியில் தொடர்புகொண்டும் பலனில்லை. தமிழ்வாணன் ஆட்டோ பிடித்து போய் இறங்கினான்.

செக்யூரிட்டியிடம் விசாரித்ததுமே, அவன் செக்ஷன் இருக்குமிடம், சொன்னான்.

"முதல் மாடி... கடைசி செக்ஷன். ரூல்ஸ் ராமானுஜம் என்பவர்தான் செக் தர்றவர்..."

போனான்.

பீரோவில், பெரிய அளவில் ரமணர் ஸ்டிக்கர் ஒட்டியிருக்க, தலையை படிய வாரி, நீலச் சட்டையை இன் பண்ணி இருந்தவரிடம், "இங்கே... மிஸ்டர் ராமானுஜம்..."

"எஸ், நான்தான்" என்றார், மூக்கில் சரிந்த கண்ணாடியைச் சரி செய்து கொண்டே.

விசிட்டிங் கார்டை நீட்டி "நான் தமிழ்வாணன். எங்க நிறுவனத்துக்கு, 'பேமண்ட்' பாக்கி இருக்கு..."

"ரெண்டு மாசமா கொஞ்சம் டைட். இப்போ, நார்மலாயிடுச்சு. 'செக்' போட்டு வைச்சிருக்கேன். 'ஸ்டாம்ப் ரெஸிப்ட்' ரெடி பண்ணுங்க..."

தமிழ்வாணனுக்கு விழிகள் விரிந்தன.

ஒரே பேமண்ட்டா? எவ்வளவு கேட்பானோ?

ரெசிப்ட் தந்து, செக்கை வாங்கிக் கொண்டே கேட்டான்.

"உங்களுக்கு எவ்வளவு தரணும்?"

"எனக்கு ஆபீஸ் சம்பளம் தருது. நீங்க ஏதும் தர வேண்டாம்"

"சார், உங்கள மாதிரி ஆளுங்க இருப்பதாலதான் இந்த ஏரியாவுல மழையே பெய்யுது... குட். இந்த நேர்மையைத் தொடர்ந்து கடைபிடிங்க. வாழ்க்கையில எங்கேயோ போய்விடுவீங்க"

ராமானுஜம் "எனக்கு வேலை நிறைய இருக்கு. பார்க்கலாம். பை" என்று கை கொடுத்து, விடை தந்தான்.

வெளியே வந்து பார்க்கில் உட்கார்ந்த தமிழ்வாணன், ப்ரீஃப்கேஸைப் பிரித்து, செக்கை உள்ளே வைத்துவிட்டு, அவனது 'டைரியை' எடுத்து, இன்றைய தினத்தைப் பிரித்து, 'செக் கிளார்க்கிற்கு லஞ்சம் ரூபாய் ஐந்நூறு' என்று எழுதி வைத்து, பேக்கிலிருந்து ஐந்நூறு ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து, தன் பையில் வைத்துக் கொண்டான். ○

# அன்பே வா... அந்தஸ்தே போ!

ராதாவும் ரோகிணியும் பி.யு.சி முதல் பி.எஸ்ஸி வரை என் மாணவிகள். இரண்டு பேரும் முதலாம் வகுப்பு முதலே தோழிகள்.

இருவரும் ஒரே மாதிரி உடை அணிவார்கள். பலரும் அவர்களை இரட்டையர் என்றே நினைத்தனர். ரோகிணி சற்று அமைதியான பெண்; கெட்டிக்காரி. பெயின்டிங், எம்ப்ராய்டரி எல்லாம் செய்வாள். ராதா ஓயாமல் பேசுவாள். அவர்களுக்குள் உறுதியான மனவொற்றுமை இருந்தது. ஆனால் அவர்கள் புதிய சிநேகிதிகளை உருவாக்கிக் கொள்ளவே இல்லை. அவர்கள் யாரை மணந்து கொள்ளுவார்கள் என்று நான் வியப்பது உண்டு. காலம் பல பாடங்களைக் கற்பிக்கிறது... ராதா, ரமேஷ் என்பவரைக் காதலித்தாள். அவர்கள் திருமணத்தில், ரோகிணி சுரேஷைச் சந்தித்தாள்.

ரமேஷ் தில்லியில் வேலை பார்க்கிற சிவில் இன்ஜினீயர். சுரேஷ் பெங்களூரில் ஒரு தனியார் நிறுவனத்தில் பணிபுரிகிற மெக்கானிக்கல் இன்ஜினீயர். ராதாவைவிட ரோகிணியை அடிக்கடி பார்ப்பதுண்டு. ராதாவைப் பற்றி அவள் தகவல் சொல்லுவாள். கொஞ்ச நாட்களில் இருவருக்குமே குழந்தைகள் பிறந்தன...

பெங்களூர் நகருக்கு வெளியே ஓர் அனாதை இல்லம் கட்ட வேண்டும் என்று நான் திட்டமிட்டுக் கொண்டிருந்தேன். யாரிடம் வேலையை ஒப்படைப்பது என்று யோசித்துக் கொண்டிருந்தேன். எனக்கு வேண்டியது, தரமும் உயர்வாக இருக்க வேண்டும். பணமும் குறைவாகவே செலவாக வேண்டும். ஆனால் நிஜ வாழ்க்கையில் குறைந்த செலவும், தரமான கட்டடமும் சாத்தியம் இல்லைதான்.

ஒரு நாள் முப்பதைத் தாண்டிய ஒருவர் என்னைத் தேடி வந்து, அனாதை இல்லத்துக்கு ஒரு திட்டம் வைத்திருப்பதாகச் சொன்னார். அவருடைய தொண்டுணர்வைக் கண்டு வியந்தேன். அவர் தந்த திட்டச் செலவோ இன்னும் திகைப்பைத் தந்தது.

"நீங்கள் கொடுத்திருக்கிற தரமான கட்டுமானப் பொருள்களின்படி பார்த்தால், இதுதான் சரியான மதிப்பீடு என்று உங்களுக்கு நிச்சயமாகத் தெரியுமா?'' என்று கேட்டேன்.

அவர் சிரித்தபடியே, "அம்மா, இது எனக்கு இட்ட பணி. வியாபார நோக்கம் இதில் இல்லவே இல்லை. இதில் எனக்கு எந்த லாபமும் கிடையாது!'' என்றார்.

எனக்கு ஒரே மகிழ்ச்சி. "அப்படியானால் சேவையிலும் நன்கொடையிலும் நம்பிக்கை உண்டு என்று சொல்லுங்கள். சரி, யார் இட்ட பணி இது?''

"என் உள்நாட்டு அமைச்சர்! அம்மா, நீங்கள் என்னை நினைவு வைத்துக் கொண்டிருக்க மாட்டீர்கள். ஆனால் என் மனைவி ராதா உங்களைப்பற்றி எப்போதும் சொல்லிக் கொண்டே இருப்பாள்!''

இப்போது புரிந்தது - ராதா கன்ஸ்ட்ரக்ஷன்ஸ், என் மாணவி ராதாவின் கணவர் நடத்தும் நிறுவனம். உடனே எனக்கு ரோகிணியின் நினைவு வந்தது...

"ஆனால் நீங்கள் தில்லியில் அல்லவா வேலை செய்து கொண்டிருந்தீர்கள்? இங்கே எப்படி வந்தீர்கள்?''

"ஓ, அதுவா? நான் தில்லியில் என் வேலையை ராஜினாமா செய்துவிட்டு, ஒரு கன்ஸ்ட்ரக்ஷன் கம்பெனி ஆரம்பித்தேன். கடவுள் அருளால் நன்றாகவே நடந்தது. இப்போது பெங்களூர் வளர்ந்து வருகிறது. எனவே ஒரு கிளையை இங்கே

# சுதா மூர்த்தி

## டானிக் தொடர்

ஆரம்பித்து, மேம்பாலம், சுரங்கப்பாதை எல்லாவற்றுக்கும் முயற்சி செய்யலாமே என்று இங்கே வந்தோம். உங்களுக்குத் தான் தெரியுமே, ராதா பெங்களூர்க்காரி. அவளுக்கு இங்கே வரவேண்டும் என்று ஒரே ஆசை.

என் தில்லி அலுவலகத்தை என் பார்ட்னருக்குக் கொடுத்துவிட்டு இங்கே வந்துவிட்டேன். தங்களுடைய பணியைப் பற்றி ராதா செய்திகளில் படிப்பாள். உங்கள் பணிகளில் எப்படியாவது உதவ வேண்டும் என்று ரொம்பக் குறியாக இருந்தாள். ராதாவைத் திருமணம் புரிந்து கொண்ட பிறகு, எனக்கு எல்லாம் நல்லதாகவே நடந்திருக்கிறது. அதனால் அவள் சொல்லைத் தட்ட மாட்டேன்!" என்றார்.

"அவனை இங்கே ஒரு தடவை வந்துவிட்டுப் போகச் சொல்ல



7

முடியுமா?" என்று கேட்டேன்.

அடுத்த நாளே ராதா வந்து என்னைச் சந்தித்தாள். சற்றே வயதான மாதிரி தெரிந்தாள். நான் அப்போது ரோகிணியைப் பற்றி நினைக்காமலிருக்க முடியவில்லை.

"ராதா, உன்னுடன் ரோகிணியையும் சேர்ந்துதான் பார்ப்பேன் என்று நினைத்தேன்... ஒரே மாதிரி சேலையில்! உங்களைப் போலவே உங்கள் குழந்தைகளும் நண்பர்களாக இருக்கிறார்களா?" என்று வேடிக்கைக்காகக் கேட்டேன்.

ராதா மௌனமாக இருந்தாள். வருத்தம் தெரிந்தது அவள் முகத்தில். "இல்லை அம்மா, ரோகிணி இப்போதெல்லாம் என்னோடு அதிகம் பேசுவதில்லை. நான் பெங்களூருக்கு வர ஒரு காரணம், என் சிநேகிதி இங்கே இருக்கிறாள் என்பதும் தான். எங்கள் இருவருக்குமே சகோதரிகள் இல்லாததால், நாங்கள் உடன்பிறந்த சகோதரிகள் போலவே இருந்தோம். ஆனால் என்னவோ தெரியவில்லை, அந்த நட்புச் சங்கிலி அறுந்து போய்விட்டது!"

ராதாவைவிட எனக்கு இன்னும் வியப்பு. "என்ன பிரச்னையாக இருக்கும் ராதா?"

"ரோகிணி மாறிவிட்டாள், அம்மா. நான் அவள் வீட்டுக்குப் போனால், மரியாதையாக நடந்து கொள்கிறாள். ஆனால் அதில் அன்பு இல்லை. நாகரிகமாக நடந்துகொள்கிற மாதிரி பேசுகிறாள். ஆனால் அதில் சிநேகம் கொஞ்சமும் இல்லை. எதுவோ உதைக்கிறது. எனக்குத் தெரியவில்லை என்ன காரணம் என்று!"

ராதா போன பிறகு, ரோகிணியுடன் பேச விரும்பினேன். என்னைப் பார்க்க வருமாறு அழைப்பு விடுத்தேன். அவள் வந்தாள். ஆனால் அவளைச் சந்தித்த போது எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. அதிகம் பேசாமல், கவலை மிகுந்தவள் மாதிரி தெரிந்தாள்.

"என்ன ஆச்சு ரோகிணி? நீ ராதாவிடம் கூட சிநேகிதமாக இருப்பதில்லையாமே? ராதாவால் உனக்கு ஏதும் வருத்தமா?"

"நேரடியாக அல்ல. பொருளாதார அந்தஸ்து இடைவெளி இருக்கிறது எங்களுக்குள்... என் கணவர் சம்பாதிப்பது அதிகமில்லை. எங்களுக்குக் கொஞ்சம் நிதி நெருக்கடி. என்னைப் பொறுத்தவரை நட்பு என்பது சமமான அந்தஸ்து உள்ளவருக்கு இடையே இருப்பது நல்லது. ராதா பணக்காரி. என்னை நட்புடன் பார்க்காமல், பரிதாபத்துடன் பார்க்கிறாள்!"

"நீ எப்படிச் சொல்லுகிறாய்?"

"அவள் வருகிறபோதெல்லாம் என் மகளுக்கு விலை உயர்ந்த பொம்மைகள் பரிசாகத் தருகிறாள். ஏதாவது காரணம் சொல்லி, பட்டுப் புடைவையை எனக்குக் கொடுத்து விடுகிறாள். என்னால் அதைத் திருப்பிச் செய்ய முடியாது. அவள் என்னைத் தாழ்வாக நினைக்கிறாளோ என்று நினைக்கிறேன். என்னவோ தெரியவில்லை, அவளோடு இருப்பது அசௌகரியமாக இருக்கிறது. கல்லூரியில் படிக்கிறபோது, இரண்டு பேரும் ஒரே மாதிரி அந்தஸ்தில் இருந்தோம். இப்போது அவளைவிடத் தாழ்வாக நான் இருப்பது போல் தோன்றுகிறது. எனவே நான் அவளிடமிருந்து விலகியே இருக்கிறேன்!"

எனக்கு இப்போது புரிந்தது.

## மெடிக்கல் மூலை!

காது கேளாதவர்களுக்காக ஒரு புதிய கருவி கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. நியூரோ ஸ்டிமுலேட்டர்ஸால் இயங்கும் இந்தக் கருவியை காதின் உட்புறம் பொருத்தி விட்டால், சாதாரணச் சத்தங்கள் கூட தெளிவான டிஜிட்டல் சிக்னல்களாக மாறிவிடும். முடங்கிக் கிடக்கும் கோம்பேரி நரம்பும் அவசர அவசரமாக விழித்துக் கொள்ளும்.

- Rx



பள்ளியில் ஆசிரியையாக இருக்கும் என் பெண் சொன்ன செய்தி இது. அவளது பள்ளியில் LKG ஆசிரியை ஒரு நாள் First என ஆரம்பிக்கும் வார்த்தைகளை எழுதுமாறு குழந்தைகளிடம் கூறியிருக்கிறாள். எல்லாப் பிள்ளைகளும் First Aid, First Son, First Prize என்றெல்லாம் சில வார்த்தைகள் எழுத, ஒரு குழந்தை எழுதியிருந்ததைப் பார்த்து ஆசிரியை அப்படியே சிலையாகிவிட்டாராம். அக்குழந்தை எழுதிய வார்த்தை First night என்பதாக இருந்தது தான் காரணம். அதிர்ந்து போன ஆசிரியை 'அப்படின்னா என்னடா அர்த்தம்?' எனக் கேட்க, 'எனக்கென்ன தெரியும்?' என்றது குழந்தை. 'பின் எப்படி எழுதினாய்?' என்றால், 'டி.வி.யிலே எல்லாம் சொல்றாங்க இல்லையா? அதான்!' என்று குழந்தை சொன்னதாம். நாடு எங்கே போய்க் கொண்டிருக்கிறது? டீ.வியும் சினிமாக்களும் பிஞ்சு மனங்களை எவ்வளவு கெடுத்து வைத்துள்ளன?!

- ராதாநாயகம், சென்னை

# வாசகர் குமுறல்!




பாவம், ராதாவுக்கு இவை ஒன்றுமே தெரியாது!

"இருக்கட்டும், ரோகிணி! உண்மையான நட்பில் அந்தஸ்து பெரிய விஷயமல்ல. ராதா மட்டமான பொம்மைகளை உன் மகளுக்குக் கொடுத்திருந்தால், நீங்கள் ஏழையாக இருப்பதால்தான் அப்படிப்பட்ட பொம்மைகளைக் கொடுத்தான் என்று நினைப்பாய். ராதாவின் தவறு இதில் ஏதுமில்லை. அவளைப் பற்றி நீ புரிந்து கொண்டிருப்பதில்தான் பிழை இருக்கிறது. அதனால்தான் உன்னைக் குறைவாக மதிப்பிட்டுக் கொண்டிருக்கிறாய். கிருஷ்ணர் - குசேலர் கதையை அறிந்ததில்லையா நீ? அவர்களுக்குள் அந்தஸ்து மலைக்கும் - மடுவுக்கும் உள்ள வித்தியாசத்தைக் காட்டினாலும், உண்மை சிநேகிதர்களாகவே இருந்தார்களே! ராதா சிறந்ததையே உனக்குப் பரிசாகத் தந்தால், நீ உன்னால் முடிந்தவரை அவளுக்குக் கொடு. நீ சிறந்த ஓவியர். உன் பெயின்டிங்குகளை அவளுக்குப் பரிசாகக் கொடு. அவள் மகளுடைய கவுன்களுக்கு எம்ப்ராய்டரி செய்து கொடு. பரிசின் மதிப்பு முக்கியமல்ல; அதற்குப் பின் இருக்கிற உணர்வுதான் முக்கியம். தாழ்வு மனப்பான்மையில் சிக்கி உன் நட்பைக் கெடுத்துக் கொள்ளாதே. அது ராதாவுடனான உன் நட்பை இன்னும் பலவீனப்படுத்திவிடும். உங்களுக்கு இடையே பெரிய இடைவெளி விழுந்து விடும். உனக்கு ஒரு பழமொழி தெரி யுமோ?"

"என்ன அது?" என்றாள் ரோகிணி.

"உறவினர்களுடன் நான் பிறந்தேன். நல்ல வேளை, நண்பர்களை என்னால் தேர்ந்தெடுத்துக் கொள்ள முடிகிறது!"

- பேசுவோம்

"சனிக்கிழமை மாலை எங்க வீடு நூறு சதவீதம் குஷியா இருக்கும். ஞாயிற்றுக்கிழமை காலை அதுவே நூத்தம்பது சதவீதமா மாறிடும்" என்று அதிரடியாக ஆரம்பித்தார் சன் டி.வி. வீரபாண்டியன். அவருடன் துணைக்குச் சேர்ந்து கொண்ட அவரது மனைவி மணிமேகலை,

"சன்டேன்னா என் பசங்க சாய்ஸ்தான். அன்னிக்கு குட்மார்னிங் சொல்றதுக்கு முன்னால், குட்பை சொல்றது இட்லி, தோசைக்குத்தான்" என்று குஷியாகப் பேசியவர், பதார்த்தங்களைப் பட்டியலிட ஆரம்பித்தார்.

"ஞாயிறு காலை டிபன் ஒரு வாரம் சின்னவன் வந்தியத்தேவனுக்காக பூரி, சென்னான்னா, அடுத்த வாரம் பெரியவன் வாஞ்சிநாதனுக்காக தேங்காய்ப் பால் ஆப்பம் செய்வேன். அவருக்கு டிபன்ல பப்பாளிப் பழம் இருந்தே ஆகணும். கேட்டா, வைட்டமின் X,Y,Zன்னு என்னென்னமோ அதுல இருக்கும்பாரு. மதியம் இவங்க மூணு பேருமே ஹிம்சா மூர்த்திங்க. அதான், நான்வெஜ் பார்ட்டிங்க" என்று திருமதி மணிமேகலை பேசப் பேச, ஊடாகப் புகுந்த வந்தியத்தேவன்,

"சன்டே நைட்டு டின்னர் மட்டும் எப்பவும் ஹோட்டல்லதான். அதுவும் அப்ப வீட்ல சாப்பிடுற பூரி, சப்பாத்திய ஆர்டர் பண்ணினா, அப்பாவுக்குக் கோபம் வந்துடும். ஃபிரென்ச்

**150**



சமையல் கலைஞர் சாந்தி பலராமன் தரும் இந்த வார டிஷ்:

படம்: ஸ்ரீஹரி

## மிஸ்டி தகி

**தேவையான பொருள்கள்:**

காய்ச்சி ஆறின பால் - 1 லிட்டர்
பொடித்த சர்க்கரை - ½ கப்
ரோஸ் எஸன்ஸ் - சில துளிகள்
குங்குமப்பூ - சிறிது
துருவிய பாதாம் - சிறிது

**செய்முறை:**

ஏற்கெனவே காய்ச்சி ஆறிய பாலில், சர்க்கரை, ரோஸ் எஸன்ஸ், துருவிய பாதாமை நன்றாகக் கலந்து, சிறிய மண் குடுவைகளில் ஊற்றவும்.

ஒவ்வொன்றிலும் சில துளிகள் புளிக்காத தயிரை ஸ்பூனில் கலந்து மூடி, அசைக்காமல் தயிராகத் தோய விடவும்.

தயிர் தோய்ந்ததும், அப்படியே எடுத்து ஃபிரிட்ஜில் வைத்து குளிர்ந்த பிறகு குங்குமப்பூ தூவி அலங்கரித்துப் பரிமாறவும்.



# சமைக்காமலே சாப்பிடுங்க!



# சகலவித குஷி!

ஆனியன் சூப், வெரைட்டி ரைஸ் மாதிரிதான் சாப்பிடுவோம். எங்க அம்மா மஷ்ரூம் பிரியாணி எக்ஸ்பர்ட் தெரியுமா...? வேணும்னா அவங்ககிட்ட ரெசிபி வாங்கிக்கோங்க" என்று போட்டுக் கொடுக்க, பிறகென்ன... இதோ மணிமேகலை தந்த மஷ்ரூம் பிரியாணியின் ரெசிபி:

“மஷ்ரூம் 200 கிராம், பாஸ்மதி ரைஸ் 200 கிராம். இஞ்சி, பூண்டு, புதினா, பச்சை மிளகாய் நாலுத்தையும் தனித்தனியா அரைச்சு வச்சுக்கணும். பட்டை, சோம்பு ரெண்டையும் பொடி பண்ணிக்கணும். தக்காளி, சின்ன வெங்காயத்தை பொடியா நறுக்கிடணும்... இப்போ கடாய்ல கொஞ்சம் எண்ணெய் விட்டு, தக்காளி, சின்ன வெங்காயத்தைப் போட்டு, நல்லா சிவக்க வதக்கணும். அப்புறம் அரைச்சு வச்ச இஞ்சி, பூண்டு, புதினா எல்லாத்தையும் ஒவ்வொண்ணா சேர்த்து, பிரவுன் கலர் வர்ற வரைக்கும் வதக்கிக்கிட்டே இருக்கணும். நிறைய எண்ணெய் இருந்தா நல்லது. மஷ்ரூமை தண்ணியில அலசிட்டு, அதையும் கடாய்ல போட்டு பத்து நிமிஷத்துக்கு வதக்கணும். வதக்கறதுக்கு முன்னால அரிசியை பத்து நிமிஷம் ஊற வச்சிடணும். இப்போ கடாய்ல இருக்குற மஷ்ரூம் கூட மத்த பொருள்களை அரிசியோட கலந்து, ஒன்றரை தம்ளர் தேங்காய்ப் பால் ஊத்தி, குக்கர்ல வச்சி ரெண்டு விசில் விட்டா மஷ்ரூம் பிரியாணி ரெடி" என்று மணிமேகலை முடிக்க,

“நல்லா இருந்தா சாப்பிடுங்க... நல்லா இல்லன்னா நேருக்கு நேர் வந்து சொல்லிடுங்க. அங்கிருந்தே திட்டாதீங்க" என்றார் வீரபாண்டியன். வீட்டில் சிரிப்பலை..!

- முத்து
படம்: ராஜன்



எத்தனை வாரந்தான் விவரந்தெரியாத ஆளு மாதிரியே வேஷம் கட்டி வந்து மேட்டர் தேத்தறது... ஒரு சேஞ்சு வேணும்ல...? அதான் இந்த வாரம் பேண்ட்டு... ஷர்ட்டு... கழுத்துல டையி... கையில செல்லுன்னு செம பீட்டரிங் பார்ட்டியா கிளம்பிட்டேன்.... எங்கங்கிறீங்களா? அதாங்க, நம்ம அய்யன், திருவள்ளுவர் கோட்டத்துக்குத்தேன்!

ரிலையன்சு அம்பானியே லைன்ல வந்து பேசுற மாதிரி ஜம்பமா பேசிக்கிட்டே, என்ட்ரி டிக்கெட் வாங்காம டிமிக்கி கொடுத்துட்டு உள்ளே பூந்துட்டேன். ஆஹா... கொஞ்ச நாளைக்கு முன்னால வந்தப்போ ரொம்ப மோசமா இருந்தது. இப்போ படா சோக்கா இருக்குது... என்னா 'பசுமையா' இருக்குது...! ஹலோ... நான் தோட்டத்தோட பசுமையைச் சொல்றேன். நம்ம இண்டியன் பேங்குதான் 'பசுமையை' மெயின்டெயின் பண்றாங்க. வெரி குட்...

நாமதான் ரொம்ப ராசியானவனாச்சே... உள்ளே நுழைஞ்ச கொஞ்ச நேரத்துல செம மழை... "அது வந்தா என்ன... வரலைன்னா என்ன"ன்னு சொல்ற மாதிரி, கொஞ்சம்கூட மழையைப் பத்தி அலட்டிக்காம, ஜோடி ஜோடியா மழையில நனைஞ்சுக்கிட்டே உலாத்திக்கிட்டு இருந்தாங்க காதலர்கள்... அங்க எங்கும் ஜோடிங்க மயம்தான். குறள்மணி மாடம்னு சொல்வாங்களே... அது எப்படி இருக்குன்னு ஒருதடவை லுக் விடலாம்னு போனா, அது லவ்வர்ஸ் மணிமாடமா மாறி ரொம்பக் காலமாயிடிச்சி போல... தூரத்துல ரெண்டு பேரு உட்கார்ந்திருக்க, என்ன பேசுறாங்கன்னு கேட்கக் கூடாதுன்னே(!) அந்தப் பக்கம் போனேன்... ஆனாலும் நம்ம பொல்லாக் காது, அவங்க பேசின மேட்டரை லபக்கிக் கொண்டு வந்துடுச்சு. இருங்க... இருங்க... அவசரப்படாதீங்க... சொல்றேன்.

"அருண் செல்லம்... இந்த மாயாஜால், வி.ஜி.பின்ற வார்த்தைகளையெல்லாம் இதுக்கு முன்னால கேள்விப் பட்டிருக்கியா...?"

"எதுக்கு கேட்குற...?"

"இல்ல... எப்போ பார்த்தாலும் அண்ணா சமாதி, வள்ளுவர் கோட்டம், காந்தி

மண்டபத்துக்கே கூட்டிட்டு வர்றியே... அதான் கேட்டேன்..''

''க்கும்.... நீ பில்கேட்ஸ் பேத்தி... நான் மைக்கேல் ஜாக்ஸன் மருமவன். போடி... அண்ணா சமாதிக்கே அல்லாட வேண்டியிருக்கு. இதுல மாயாஜாலு வேற''

பையன் என்னைய முறைக்க, கொஞ்சம் ஓரமா தள்ளி வந்தா, எதிர்ல ஒருத்தர் வேக வேகமா நம்மளைப் பார்த்து வர்றாரு. ஆஹா... சிக்கிக்கிட்டோமான்னு நினைச்சா, படார்னு பெட்டியை ஓரமா வச்சி, தொறந்து எதையோ தேடினாரு... கையில் கட்டம் போட்ட லுங்கி.. அடுத்த நிமிஷம் பேண்ட்டிலிருந்து லுங்கிக்கு மாறினவர், வேஷ்டியை தலையணையா வச்சி, கட்டையை நீட்டிட்டாரு... ப்பூ... நான் என்னவோன்னு நினைச்சுட்டேன்.

வேலை தேடா பட்டதாரிகள், வேலை செய்யா ஊழியர்கள், நைட் டிரெயினுக்குக் காத்திருப்பவர்கள்... இவங்களுக்கு டைம்பாஸ் செய்ய வசதியா இருக்குது இந்தக் கோட்டம்.



# காதலர் கோட்டம்!

தேருக்குப் பக்கத்துல ஒரு இளஞ்ஜோடி உட்கார்ந்திருக்க, அங்கு வந்த அஞ்சாறு பசங்க, பையன்கிட்டயும், பொண்ணுகிட்டயும் மாறி, மாறி டைம் கேட்டு டார்ச்சர் பண்ண, ரெண்டு பேரும் முணுமுணுத்தபடி இடத்தைக் காலி செய்யறதைப் பார்த்ததும், ரோமியோக்கள் முகத்துல அப்படியொரு சந்தோஷம்... ஹைய்யோ... ஹையோ...!

ஆமா... இந்த வள்ளுவர் கோட்ட பார்க்கை அழகா வச்சிருக்கற மாதிரி, ஆடிட்டோரியத்தையும் சுத்தமா கூட்டிப் பெருக்கி, பளிச்சுன்னு ஆக்கினா என்ன...? பாழடைஞ்ச பங்களா மாதிரி இருக்கு.. அந்த மாதிரி தேர் கோபுரத்தைச் சுத்தி இருக்குற தோரணங்கள் ஏன் இவ்ளோ புத்தம் புதுசா (!) இருக்கு. எதுனா சென்டிமென்டா...? மஞ்சள் துண்டு, பச்சை புடைவை மாதிரி! விசிட் முடிச்சுட்டு வெளியே வந்தப்ப, நம்மள மாதிரியே வெறுத்துப் போன ஒருத்தர் புலம்பிட்டுப் போனாரு...

"பேசாம காதலர் கோட்டம்னு பேரை மாத்திடுங்கய்யா!"

- ஒற்றன்

படங்கள்: ராஜன்

# உளவியல் தொடர்கதை

அடுத்தடுத்த கூண்டுகளில் இரண்டு கிளிகள். ஒன்று ஜோதிட மேதை! மற்றொன்று அப்போதுதான் காட்டிலிருந்து பிடித்துக் கொண்டு வரப்பட்ட ஏதுமறியா அப்பாவி.

முதலாளி நாணயஸ்தன். கிளி தேர்ந்தெடுக்கும் ஒவ்வொரு சீட்டுக்கும் தவறாமல் ஒரு நெல்மணியை அதற்குக் கொடுத்து விடுவான்.

கிளியின் அலகுகள் வலிக்கத் தொடங்கியிருந்தன. என்ன செய்ய, சீட்டுகள் முன்பு போல் எடை குறைந்தவையாக இல்லை. வேடிக்கை பார்க்க வருபவர்களை வாடிக்கையாளர்களாக்க சீட்டின் மீது கனமான அட்டை, ஜிகினாத்தாள் என்றாகிப் போனதில், ஒவ்வொரு சீட்டையும் கலைத்துக் கீழே போடுவதில் கிளிக்குச் சிரமம் ஏற்பட்டது. ஒவ்வொரு முறையும் மேலாக இருக்கும் சீட்டையே தேர்ந்தெடுத்துக் கொடுக்கவும் அதன் தொழில் தர்மம் இடம் தரவில்லை.

அன்று அனைவருக்கும் வழக்கத்தை விட அதிகக் கஷ்டகாலம் போலும்! வருங்காலம் அறியவும், பரிகாரத்துக்கு விரையவும் பலருக்கு ஆவல் ஏற்பட்டிருந்தது. நிறையப் பேர் கிளி ஜோதிடத்தை நாடினார்கள்.

அன்றிரவு புதுக் கிளியிடம் ஜோதிடக் கிளி வருத்தப்பட்டது. "என் அலகுகள் மிகவும் வலிக்கின்றன."

அனைத்தையும் பார்த்துக் கொண்டிருந்தாலும் விவரம் புரியாத புத்திமட்டுக் கிளி "ஏன்?" என்று காரணம் கேட்டது.

"இன்று நிறைய நெல்மணிகளை முதலாளி கொடுத்துவிட்டார். அதனால் தான்" என்றது ஜோதிடக்கிளி.

"வாங்க, வாங்க, வாங்க" என்று வரவேற்றாள் ஸ்ரீலதா. வரவேற்கும் விதத்தில் ஒரு புன்னகையை மட்டும் வெளிப்படுத்தினான் கார்த்திக்.

"எனக்கு ஒரு வாங்க. உன் அக்காவுக்கு ஒரு வாங்க. மூணாவது யாருக்கு?" என்று



# விலங்குகள்

சிரித்தபடி கேட்டான் ராஜன்.

"உங்களுக்கு ரெண்டு பங்கு வரவேற்புன்னு வச்சுக்கங்க அத்திம்பேர்" என்ற ஸ்ரீலதாவின் பார்வை, அங்கிருந்த மீன் தொட்டியின் மீது மீண்டும் தாவியது. "அக்கா, இந்த கோல்ட் ஃபிஷ்ஷைப் பாரேன். இது தங்க கலரா, இல்ல தக்காளி கலரா? நல்லா குண்டா புஷ்டியா இருக்கு இல்ல?"

எவ்வளவு பெரிய மீன் தொட்டி! எத்தனை மீன்கள்! மெதுவாக நகர்ந்து செல்லும் தட்டை ஏஞ்ஜல் மீன்கள். உடலில் பகுமையான மஞ்சளைப் பூசியது போல் கப்பிஸ் வகை மீன்கள். வால்கள் மட்டும் பல வண்ணங்களில் காணப்பட்டன.

ராஜனின் கவனம், வேகமாகப் பயணம் செய்யும் 'மாலி' வகை மீன்கள்மீது பதிந்திருந்தது. கறுப்பு, ஆரஞ்சு ஆகிய இரு வண்ணங்களிலும் தோற்றமளித்தன அவை.

"எக்ஸ்க்யூஸ்மி" என்று ஒரு புதுக் குரல்

அருண் சரண்யா

கேட்டது. அனுஷா திரும்பிப் பார்த்தாள். மல்லிகா, கார்த்திக்கின் செயலாளர். வரும் நோயாளிகளை வரிசைப்படி அனுப்புவதிலிருந்து, கார்த்திக்குக்கு வரும் தொலைபேசி அழைப்புகளை முதலில் கேட்டு வடிகட்டி அனுப்புவது வரை, பல பொறுப்புகள் அவள் வசம் என்பதை அனுஷா கேள்விப்பட்டிருந்தாள். திருமணமாகாதவள்.

"மல்லிகா, எப்படி இருக்கீங்க?" புன்னகையுடன் விசாரித்தாள் அனுஷா. தலையாட்டலை மட்டும் பதிலாக்கிவிட்டு, கார்த்திக்கை நோக்கி "டாக்டர், கீழே மிஸ்டர் ராஜசேகர் வந்திருக்காரு" என்றாள்.

கார்த்திக் தன் மனைவியிடம் "வந்தவங்களுக்கு போர்ன்விட்டாவோ, ஹார்லிக்ஸோ கொடு" என்றான்.

"டாக்டர், கீழே மிஸ்டர் ராஜசேகர்" என்று மீண்டும் மல்லிகா கூற, 'இதென்ன

3

அனாவசியமான மறுநினைவூட்டல்' என்று பட்டது அனுஷாவுக்கு. மல்லிகா கீழே செல்ல, அவளைச் சுற்றிப் படர்ந்திருந்த இனிமையான செயற்கை நறுமணமும் விலகியது.

அடுத்த நிமிடமே கார்த்திக் கீழே சென்றான்.

அனுஷா, தங்கையை உற்றுப் பார்த்தாள். சங்கடப்படுகிறாளோ? மல்லிகா எடுத்துக்கொள்ளும் அதிகப்படி உரிமையோ, தன் பிறந்த வீட்டு மனிதர்களிடம் இரண்டு நிமிடம் கூட நின்று பேசாத கணவனின் போக்கோ சங்கடத்தைத் தந்திருக்கலாமோ!

ஆனால் ஸ்ரீயின் முகத்தில் எந்தத் தவிப்பும் தெரியவில்லை.

"அக்கா அக்கா, இந்த மீனைப் பாரேன்..." மீண்டும் அவள் தன்னை அழைத்தபோது, அனுஷாவுக்குள் அந்த ஐயம் குடி புகுந்தது. 'ஒருவேளை கார்த்திக் இவளிடம் சகஜமாகப் பழகுவதில்



லையோ? அதை ஈடுகட்டத்தான் இந்த மீன்களின்பால் அதிக கவனத்தைச் செலுத்துகிறானோ?'

மூன்று மாதங்களுக்கு முன் கார்த்திக் தொலைபேசியில் தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டது நினைவுக்கு வந்தது.

"நான் கார்த்திக். எம்.பி.பி.எஸ். உங்க வீட்டிலே இருந்து ஒரு கிலோமீட்டர் தள்ளிதான் எங்கள் வீடு."

அனுஷாவுக்கு எதுவும் விளங்க வில்லை. சட்டென மனதில் ஒரு கலக்கம் பரவியது. ஸ்ரீ, ராஜன் இருவருமே அப் போது வீட்டில் இல்லை. யாருக்கு என்ன? சாலை விபத்து? இந்த டாக்டர் சிகிச்சை அளிக்கிறாரா? ஒருவேளை... ஐயோ!

"என்ன....? என்ன சொல்ல வர்றீங்க? டாக்டர்?"

"சொல்லத் தயக்கமாக இருக்கு. இருந்தாலும் சொல்லித்தான் தீரணும். எங்க வீட்டு மொட்டை மாடியிலிருந்து பார்க்கும்போது, பக்கத்திலே இருக்கும் ஆஞ்சநேயர் கோயிலின் உட்புறம் தெரியும். ஒவ்வொரு வியாழக்கிழமையும் உங்கள் தங்கை ஸ்ரீலதா இந்தக் கோயிலுக்கு வருவது வழக்கம். சில சமயம் நீங்களும் அவகூட வருவீங்க."

ஆம். அந்தக் கோயிலுக்கு ஒவ்வொரு வியாழக்கிழமையும் ஸ்ரீ செல்வதுண்டு. அனுமனை நாற்பத்தியெட்டு தடவை சுற்றுவது தவறியதில்லை. திறந்தவெளிப் பிராகாரம் என்பதால், இவனால் தன் வீட்டு மேல் பகுதியில் இருந்து அவளைப் பார்க்க முடிந்திருக்கிறது.

'என்ன நடக்கிறது என் தங்கையைச் சுற்றி?' அனுஷாவின் உடல் வெடவெடக் கத் தொடங்கியது.

"எனக்கு உங்கள் தங்கையைப் பிடித் திருக்கிறது. அவளைக் கல்யாணம் செய்து கொள்ளலாம்னு விருப்பம். நீங்க ஒத்துக் கிட்டா வருகிற ஞாயிற்றுக்கிழமை..."

**"கார்த்திக் எப்படி பார்த்துக்கறார் ஸ்ரீ?"**

அதற்கு மேல் கேட்க முடியாமல் சட்டென ரிசீவரை வைத்துவிட்டாள் அனுஷா. நல்ல வேளையாக மறுபடியும் அது அப்போதைக்கு ஒலிக்கவில்லை.

"அக்கா, எனக்குப் பசிக்குது" என்றபடி கல்லூரியில் இருந்து வந்த ஸ்ரீலதா, அக் காவின் படபடப்பை சிறிதும் உணராதவ ளாக சமையலறைக்குள் நுழைந்துவிட் டாள். ஆனால் அதற்கு ஒரு மணி நேரம் கழித்து வந்த ராஜனால் அனுஷாவின் மாற்றத்தைத் துல்லியமாகக் கணிக்க முடிந்தது.

"என்ன ஆச்சு அனு? எதைப் பார்த்து அல்லது கேட்டு இப்படி மிரண்டு போயி ருக்கே?"

அதற்கு மேல் தாங்க முடியாமல் கொட்டித் தீர்த்தாள் அனுஷா. பிறகு கணவனின் முகத்தைப் பார்த்தாள். தன்



தங்கையிடம் உண்மையான பாசத்தோடு பழகுபவன் என்று தெரியும். எனவே அவனும் கோபத்தில் பொங்குவான் என நினைத்திருந்தாள்.

ஆனால் ராஜன் மௌனமாகவே இருந் தான். பத்து நிமிடங்களுக்குப் பிறகு "இதைப் பற்றி இப்போ பேச வேண்டாம் அனு. ரெண்டு நாள் ஆகட்டும்" என்றான்.

அடுத்த இரண்டு நாட்களில் அனுஷாவின் படபடப்பு பெரிதும் குறைந்துவிட்டது. தங்கை காதலில் சிக்கி விடவில்லை என்பதையும், அவனுட னான மறைமுகப் பேச்சில் அனுமானிக்க முடிந்ததில் மேலும் நிம்மதி ஏற்பட்டி ருந்தது.

ராஜன் மெதுவாகப் பேச்சைத் தொடங்கினான். "போய்ப் பார்த்துட்டு வரட்டுமா?"

அனுஷாவுக்கு ஆயிரம் தயக்கங்கள். ஸ்ரீ பெற்றோர் இல்லாத பெண். வரதட்சணை என்கிற பேச்சிற்கே இடமில்லை. அதுவும் டாக்டர்களின் கல்யாண மார்க்கெட் நிலவரம் அவள் அறிந்ததுதான். மேலும் பொதுவாக டாக்டர்களுக்குள்ளேதானே திருமணம் செய்துகொள்வது வழக்கம்? பின் எதற்காக இந்த கார்த்திக், ஸ்ரீயை விரும்புகிறான்? ஸ்ரீயின் அழகு அவனைக் கவர்ந்திருக்க வேண்டும். அவள் தன்னை விட அதிகச் சிவப்பு. தன்னைவிட இளமைத் துள்ளல். தன்னைவிட இன்னமும் சிறப்பாக செதுக்கப்பட்ட முக அமைப்பு. போதாக்குறைக்கு கோயிலில் அவளைப் 'பார்த்து' விட்டுத்தான் திருமணம் பற்றி முடிவெடுத்ததாக அவனே கூறி இருக்கிறான். அவன் விரும்பினாலும் அவன் பெற்றோர் ஏற்றுக்



கொள்வார்களா? இதில் ஏதாவது வில்லங்கம் இருக்குமா?

"நியாயமான சந்தேகங்கள்தான். தீர விசாரிக்கலாம்- நேரடியாகவும், மறைமுகமாகவும்" என்றான் ராஜன்.

கிடைத்த விவரங்கள் நிறைவளித்தன. திருமணம் நடந்துவிட்டது. இப்போது தங்கையின் புகுந்த வீட்டில் அவளும் ராஜனும்.

"அக்கா, இன்னிக்கு என் சமையலைத்தான் நீங்க ரெண்டு பேரும் சாப்பிடணும். இன்னக்கி ஞாயிற்றுக்கிழமையாச்சே. அதனாலே கமலம்மா வரமாட்டாங்க. இரு, முதல்லே காபி கொண்டு வரேன்."

காபி கலப்பதற்காக ஸ்ரீ சமையலறைக்குச் செல்ல, அனுஷா பின் தொடர்ந்தாள்.

தண்ணீர் கொதிக்கத் தொடங்கியது. மெல்லிய குரலில் அனுஷா கேட்டாள். "கார்த்திக் எப்படி?"

"ரொம்ப பிஸிக்கா. நிறைய நோயாளிங்க வராங்க."

அனுஷாவுக்குக் கோபம் வந்தது. தான் கேட்கும் கோணம் என்ன, இவள் கூறும் விவரம் என்ன!

"உன்கிட்டே அவர் எப்படி நடந்துக்கிறார்னு கேட்டேன்?"

சட்டென அனுஷாவின் முகம் சிவந்தது. "காலையிலே அப்பல்லோவுக்குப் போயிடுவார். மதியம் ஒரு மணிக்கு வந்துடுவார். வீட்டிலேதான் சாப்பாடு. சாயந்திரம் கிளினிக் ஆறு மணிக்குத் தொடங்கும் வரை என்னை நகரவே விடமாட்டேன்றாருக்கா."

அனுஷாவின் முகபாவம் அவள் கூறுவது உண்மைதான் என்பதை உணர்த்தியது. ஒரு பெரிய பாரம் மனதை விட்டு அகன்றதாக உணர்ந்தாள்.

**"க்ளினிக் போற வரை என்னை நகரவே விடமாட்றார்!"**

ராஜன் இதற்குள் சமையலறைக்குள் வந்துவிட்டான். "அக்காவும் தங்கையுமே பேசிக்கிட்டிருந்தா எப்படி? அனு, உன் தங்கை உன்கிட்டே என்ன கதை சொல்லிக்கிட்டிருந்தா?"

"அதெல்லாம் சஸ்பென்ஸ்" என்ற ஸ்ரீ. "நான் சொன்னது இருக்கட்டும். நீங்க முன்பெல்லாம் எனக்கு தினமும் ஒரு உண்மைக் கதை சொல்வீங்களே, இன்னிக்கும் ஒண்ணு சொல்லுங்களேன்" என்று கேட்க, ராஜன் ஆரம்பித்தான்.

ராஜனின் வாயைப் பொத்தத் தோன்றியது. தங்கையின் கன்னத்தில் ஓர் அறை வைக்கத் தோன்றியது. சுய இரக்கம் சுரக்க, அனுஷா தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் அழத் தொடங்கினாள். என்னவாயிற்று இவளுக்கு? ராஜனும், ஸ்ரீலதாவும் அவளைப் பார்த்து வியப்படைந்தார்கள்.

(தொடரும்)

# 'சகுந்தலா'வின்

சென்ற 1941-ம் வருஷ ஆரம்பத்தில் நான் சத்தியாக்கிரஹம் செய்வதற்குச் சித்தமாகிக் கொண்டிருந்த சமயத்தில், 'சகுந்தலா' படத்தை எடுத்த ஸ்ரீ.டி. சதாசிவம் என்னைப் பார்க்க வந்தார். அவரும் நானும் பழைய சிறைச்சாலை நண்பர்கள். 1922-ல் என்னைத் திருச்சி சென்ட்ரல் ஜெயிலுக்குள்ளே கொண்டு விட்டு, வெளிக்கதவைச் சாத்தியபோது, நான் திக்குத்திசை புரியாமல் திகைத்து நின்று கொண்டிருந்தேன். அச்சமயம் அங்கே ஸ்ரீ சதாசிவம் வந்து, "நீங்கள் தானே... கரூரில் கைதியாகி வந்தவர்?" என்று கேட்டுக்கொண்டே என் கையைப் பிடித்து அரசியல் கைதிகள் இருந்த பகுதிக்கு அழைத்துப் போனார். அதுதான் எங்கள் முதல் சந்திப்பு.

மறுபடியும் 1930-ல் நாங்கள் தற்செயலாக ஒரே சிறையில் சந்தித்துச் சிலகாலம் சந்தோஷமாய்க் கழித்தோம்.

இப்போது நான் மறுபடியும் சிறைக்குப் போகிறேன் என்று அறிந்ததும் ஸ்ரீ சதாசிவம் வந்து, "இந்தத் தடவை நான்தான் ஜெயிலுக்கு வருவதற்கில்லை; உங்களையாவது அனுப்பிவிட்டு வருகிறேன்" என்று சொல்லி, 21 நாள் என் கூடவே இருந்து, சிறைக்கதவு என் பேரில் சாத்தப்பட்ட பிறகுதான் திரும்பிப் போனார்.

சத்தியாக்கிரஹம் செய்வதற்கு மூன்று நாளைக்குமுன் திருவையாற்றில் ஸ்ரீ தியாகராஜ ஆராதனை உற்சவத்துக்கு நாங்கள் போயிருந்தோம். ஆராதனைக்குப் பிறகு சதாசிவம் என்னைப் பார்த்து, "தஞ்சாவூரில் 'சகுந்தலா' படம் ஓடிக் கொண்டிருக்கிறது. பார்க்கிறீர்களா?" என்று கேட்டார். டாக்கி பார்ப்பதற்குரிய சந்தர்ப்பம் இதுவல்ல என்று நான் மனதில் எண்ணியபோதிலும், "இராத்திரி எப்படியும் மாயவரம் போய்விட வேண்டும்; இப்போது உடனே படத்தைக் காட்டினால் பார்க்கிறேன்" என்றேன். அந்தப்படியே அவர் ஏற்பாடு செய்தார்.

• எம்.எஸ். சுப்புலக்ஷ்மி - சதாசிவம்

சிறையிலிருந்து வெளி வந்ததும், நான் தெரிந்து கொள்ள விரும்பிய அநேக விஷயங்களில் 'சகுந்தலா' படம் எப்படி ஓடிற்று என்பதும் ஒன்று. மாயவரத்தில் என் நண்பர் ஒருவர், "இங்கே சகுந்தலா ஓடுகிறது; படம் அபாரம்" என்றார். அவர் படித்த மனுஷர்; பொறுப்புள்ள உத்தியோகத்திலுள்ளவர். "அப்படியா? நீங்கள் பார்த்தீர்களா?" என்றேன். "பார்த்தீர்களா என்று கேட்கிறீர்களே! இந்த ஊரில் 45 தடவை பார்த்தேன். அப்புறம் சென்னைக்குப் போனபோது பிரபாத்தில் எப்படியிருக்கிறது என்று தெரிந்து கொள்வதற்காக அங்கே ஒரு தடவை பார்த்தேன்!" என்றார். நான் இதை நம்பாததைக் கண்டு அவர் சத்தியம் செய்தார்! பொதுவாகத் தமிழ்நாடெங்கும் 'சகுந்



**அமரர் கல்கி**



# பொன்விழா!

**செப்டம்பர் 16, திருமதி எம்.எஸ் பிறந்ததேதி**

தலா' விஷயத்தில் பொதுமக்களின் அபிப்பிராயம் என்னுடைய அபிப்பிராயத்தையொட்டியே இருந்தது என்று அறிய மிகவும் திருப்தி ஏற்பட்டது.

ஆனால், சென்ற வாரத்தில் நடந்த பொன்விழாக் கொண்டாட்டத்தில் 'சகுந்தலை'யை நான் மறுபடியும் பார்த்தபோது, பழைய அபிப்பிராயத்தை ஓரளவு மாற்றிக் கொள்ள வேண்டியது அவசியமென்று நினைத்தேன். அதாவது இந்தப் படத்துக்கு என்னுடைய பாராட்டுதல் போதாது. இன்னும் அதிகமாய்ச் சொல்லியிருக்க வேண்டும் என்று தோன்றியது. முக்கியமாக, ஸ்ரீமதி எம்.எஸ்.ஸின் நடிப்பைக் குறித்து நான் சொன்னது போதவே போதாதுதான். "சகுந்தலா' படத்தில் அவர் பாடியிருப்பதைவிட இன்னும் எவ்வளவோ உயர்வாக இப்போது கச்சேரிகளில் அவர் பாடுகிறார். ஆனால் இந்தப் படத்தில் அவர் நடித்திருந்ததைக் காட்டிலும் சிறந்த நடிப்பை நான் இதுவரையில் எங்குமே பார்த்தது கிடையாது. பேச்சினாலும் பாட்டினாலுங் கூட வெளிப்படுத்த முடியாத இருதய உணர்ச்சிகளையெல்லாம் முகபாவத்தினாலேயே அல்லவா வெளிப்படுத்தி விடுகிறார்? படத்தின் முதற் பகுதியில் வரும் காதல் காட்சிகளில், அவருடைய முகத்தில் வியப்பு, பயம், நாணம், இன்பம் ஆகிய உணர்ச்சிகள் மாறி மாறியும், ஏக காலத்திலும் எவ்வளவு ஆச்சரியமாகப் பிரதிபலிக்கின்றன! ராஜசபைக் காட்சியில், "அடபாவி!" என்று ஆரம்பிக்கும்போது முகத்தில் கொதிக்கும் கோபம், ஒரு கண நேரத்தில் அளவிறந்த துக்கமாக மாறிவிடும் அற்புதத்தை என்னவென்று சொல்வது? கடைசிக் காட்சியில், துஷ்யந்தன் மனம் மாறியவனாய் வரும்போது, சகுந்தலையின் உள்ளத்தில் சுயகௌரவமும், பதிபக்தியும், ஆத்திரமும், ஆனந்தமும், ரோஷமும், கருணையும் போராடுவதை அவருடைய முகபாவம் எவ்வளவு தெளிவாய்க் காட்டி விடுகின்றது!

''சகுந்தலை' ஒரு சிரஞ்சீவிப் படம் என்பதில் எனக்கு என்னளவும் சந்தேகம் இல்லை. இந்தப் படத்தை ஒரு தடவையேனும் பார்த்த ரஸிகர்களின் உள்ளத்தில் அது எப்போதும் நிலை பெற்றிருக்கும் என்பது நிச்சயம்.

- 16.2.1942 கல்கி
இதழிலிருந்து



செஞ்சி நகரை நடைப்பயணமாக வலம் வந்து கொண்டிருந்தபோது கால் வலிக்கவே, ஏதாவது வாகனம் வருகிறதா என்று சாலையில் கண் வைத்தோம். வந்தது சைக்கிள். அதற்கு மேல் நடக்க வியலா கால்கள் கெஞ்ச, லிப்ட் கேட்டோம். உடனே கேரியரில் அமரச் சொல்லி சைகை காட்டினார் சைக்கிள் நபர். ஆச்சரியத்துடன் நன்றி சொல்லி உட்கார்ந்து பேச்சுக் கொடுத்த போதுதான் தெரிந்தது, பார்ட்டி தீவிர கல்கி வாசகரென்று. பெயர் சுப்ரமணியன். முப்பத்தாறு வயது இளைஞர். கல்கி என்றதும் குஷியானவர், புதிய உற்சாகத்துடன் பேசினார்.

"என்னோட பதினாறு வயசுலேருந்து தொடர்ந்து கல்கி படிச்சுட்டு வர்றேன் சார். ஒரு வாரம் மிஸ் பண்ணாலும் மண்டை வெடிச்சுடும். இன்னிக்கு வர்ற பத்திரிகைகள்ல குடும்பத்தோடு உட்கார்ந்து படிக்க முடியற இதழ்களை விரல் விட்டு எண்ணிடலாம். அதுல கல்கிக்குத்தான் முதலிடம்" என்றவர், செஞ்சி நகரின் விழுப்புரம் சாலையில் 'ஸ்ரீ மகாலெட்சுமி ஜுவல்லரி' எனும் கடையை நடத்தி வருவதாகக் கூறினார். ஊர் சுற்றும் ரோமியோக்களே இந்தக் காலத்தில் ஸ்கூட்டர், பைக் என்று பறக்க, நகைக்கடை நடத்தி வருபவர் சைக்கிளில் செல்வதா என்று ஆச்சரியத்தோடு கேட்டால்,

"வீட்டிலிருந்து கடை ஒரு கிலோமீட்டர் தூரம்தான். அதுக்கு இந்த சைக்கிள் நமக்குப் போதும்ங்க" என்கிறார் இந்த எளிமை விரும்பி.

நம்மை வீட்டுக்கு அழைத்துச் சென்றவர், தம்மைப் பற்றிய ஒரு சிறிய அறிமுகத்திற்குப் பிறகு, குடும்பத்தை அறிமுகப்படுத்தி வைத்தார்.

"என் சொந்த ஊர் திண்டிவனம். சென்னை, கிறிஸ்தவக் கல்லூரியில் 1984 - 87கள்ல இளங்கலை இயற்பியல் பட்டம் பெற்றேன். கல்லூரிப் படிப்பு முடிந்தவுடனேயே செஞ்சிக்கு வந்தவன், அப்பா கொடுத்த இருபதாயிரம் ரூபாய் முதலீட்டில் ஜுவல்லரிக் கடையைத் தொடங்கினேன். நகைக்கடை வைத்து நடத்துவது, எங்களோட பரம்பரைத் தொழில்.

1993ல் பழனியில் எனக்குத் திருமணமாச்சு. மனைவி சரஸ்வதி. இளங்கலை பொருளாதாரம் படிச்சவங்க. கல்கி வாசிக்கறதுல எனக்கு சீனியர். இருபத்திரண்டு வருட கல்கி வாசகி அவங்க" என்று சுப்ரமணியன் பேசிக் கொண்டிருக்கும் போதே, வீட்டுக்குள்ளிருந்து ஒருவித செல்லச் சிணுங்கலுடன் கோபக் குரலொன்று வெளிப்பட்டது. "நானும் நீங்க வந்ததுலேர்ந்து பார்க்கறேன். கல்கியைப் பத்தியே பேசிக்கிட்டிருக்கீங்க. எங்க கோகுலத்தைப் பத்திப் பேசவே மாட்டீங்களா?"



# கூடி வாசித்தல்!

யாரென்று பார்க்க, உள்ளிருந்து வெளிப்பட்டது பன்னிரண்டு வயது வரலட்சுமி.

சுப்ரமணியன்-சரஸ்வதி தம்பதியின் மூத்த மகள். செஞ்சி, சாரதா மெட்ரிக்குலேஷன் பள்ளியின் ஏழாம் வகுப்பு மாணவி. கோகுலம் தமிழ் மற்றும் ஆங்கில இதழ்களின் தொடர் வாசகி.

கடந்த ஐந்து வருடங்களாக பரத

நாட்டியம் பயின்று வருகிறாராம். சிதம்பரத்தில் கடந்த ஆண்டு சிவராத்திரி விழா நாட்டியாஞ்சலி நிகழ்ச்சியில் பங்கு பெற்று நடனமாடியதை, நம்மிடம் பூரிப்புடன் பகிர்ந்து கொண்டார்.

“என் மாமியாருக்கு பெண் குழந்தைகளே இல்லை. நான் இங்கு திருமணமாகி வந்ததும், என்னை அவங்க பொண்ணு போலவே பாத்துக்கிட்டாங்க, பார்த்துட்டு வராங்க. வந்த புதுசுல எனக்கு எதுவும்



## வாரம் ஒரு வாசகா குடும்பம்



சமைக்கத் தெரியாது. முகம் சுளிக்காம சமையல் கலையை அத்தனை அருமையாச் சொல்லிக் கொடுத்தாங்க. என் மாமனார் பார்த்தசாரதி, திண்டிவனத்தில் நகைக் கடை வைச்சு நடத்திட்டு வர்றார். அவரும் தங்கமானவர்” என்று சரஸ்வதி சொல்லிக் கொண்டிருக்கும்போதே, உள்ளிருந்து கைக்குழந்தையுடன் வந்தார் மாமியார் ஜெயஸ்ரீ.

“என் குடும்பத்துல பெண் குழந்தையே இல்ல. அந்தக் குறைய என் மருமக போக்கிட்டா. ஆண் வாரிசு வேணும்னும் ஆசைப்பட்டா. முதல் பொண்ணு பொறந்து பதினொரு வருஷம் கழிச்சு இப்ப பேரன் பொறந்திருக்கான்” என்றார் மகிழ்ச்சியுடன்.

“செஞ்சியைச் சுற்றியுள்ள இருபது - முப்பது கிராமத்து மனுஷங்கதான் எங்க கடை வாடிக்கையாளருங்க. பெரும்பாலும் கிராமவாசிங்க. சூது வாது ஏதும் லேது” என்று கிண்டல் தொனிக்கப் பேசிய சுப்பிரமணியன்,

“ஆனா கல்யாணத்துக்கு பத்து பவுன், இருபது பவுன் நகைக்கு ஆர்டர் தருவாங்க. செஞ்சு வைச்சுட்டு உட்கார்ந்திருந்தா ஆளே வரமாட்டாங்க. கல்யாணத்துக்கு முதல் நாள் இரவு வீட்டுக் கதவை வந்து தட்டு வாங்க. ‘எதிர்பார்த்த இடத்தில் பணம் கிடைக்கல, நீங்க நகை குடுத்தாத்தான் காலையில கல்யாணம்’னு வந்து நிப்பாங்க. பத்தாயிரம், இருபதாயிரம் பாக்கி நிக்கும். கடன் சொல்வாங்க. மொய் வந்ததும் தர்றேம்பாங்க. அதுக்கப்புறமா அவுங்களுக்குக் குழந்தை பொறந்தும், நமக்கு அந்தக் கடன் வந்து சேராது. இவுங்ககிட்டே என்ன ஒரு நல்ல பழக்கம்னா கடன் பட்டுட்டு, அதை அடைக்காம இருந்து, அப்புறமா நகை எதுவும் வாங்கணும்னா, அதற்கான பணத்தை எடுத்துக்கிட்டு திரும்பவும் நம்மகிட்டேதான் வந்து நிப்பாங்க. ‘சரி இந்தக் கடையிலதான் கடன் வைச்சுட்டமே, ரொக்கத்துக்கு வேற கடையில நகை வாங்கிட்டுப் போயிடலாம்’னு புதுசா ஒரு கடைக்குப் படியேறிப் போயிட மாட்டாங்க. கடன் குடுத்தா, பணம் வர கொஞ்சம் முன்ன பின்னே ஆகும். ஆனா, ஏமாத்த மாட்டாங்க!” என்றார்.

இவருக்கு கல்கியில் பிடித்தது சுதா சேஷய்யர்... 

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



# எங்கே என் கண்ணன்?

'மாறாத தர்மமும்
மாறிடும் நியாயமும்
கூடிப் புணர்ந்ததில்
கூடு கண்டதே
எம் மேனி...!

- ஸ்ரீ கிருஷ்ணன்

காரின் முன்புறம் தெரிந்த அந்த ரத்தக் கீற்று, சீனுவை ஓர் உலுக்கு உலுக்கிவிட்டது. காரிலிருந்து சம்பத்தும் சாருவும் படுவேகமாக இறங்கி அவரை நோக்கி வந்தனர்.

சம்பத் வெலவெலத்திருந்தான்! பாதிமுகம் கழுவப்பட்டது போல வியர்வை. சாருவிடம் அவனைத் தேற்றும் பாவம்.

"நீங்க அனாவசியமா டென்ஷனாகாதேள்... இப்ப எதுவும் பெருசா நடந்துடலை. குறுக்க வந்தது அந்தக் கன்னுக்குட்டியோட குத்தம். அதுக்கு விதி முடியணும்னு இருக்கு, நம்ம கார்ல வந்து விழுந்து போயிடுத்து. தட்ஸ் ஆல்..."

அவள் பேசியதில் இருந்தே சீனுவுக்கு நடந்தது விளங்கிவிட்டது.

"என்ன சம்பா... ஆக்சிடெண்ட் பண்ணிட்டியா?" என்றார் படுவேகமாக.

"அ...ஆமாப்பா... முக்கம்புகிட்டாத்துல குளிச்சுட்டு ஒரு கன்னுகுட்டி ஓடி வந்து என் கார் முன்னால விழுந்து..."

"உயிர் போயிடுத்தா...?"

"அ... ஆமாப்பா... நான் மளமளன்னு காரைத் திருப்பிண்டு வந்துட்டேன்."

சீனுவுக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை.

மலங்க மலங்க மகனைப் பார்த்தார்.

"அப்பா... இவர் பேர்ல ஒரு தப்பும் இல்லை. திடீர்னு கன்னுக்குட்டி குறுக்க வந்து சக்கரத்துல மாட்டிண்டா, அதுக்கு நாம என்ன பண்ண முடியும்?" என்று சாரு விறுவிறுவென்று கொல்லை வரைபோய் ஒரு பக்கெட்டில் தண்ணீரும் பழைய துணியுமாக வந்து,





காரில் படிந்திருக்கும் அந்த ரத்தக் கறையைக் கழுவத் தொடங்கினாள்.

ஒருநிமிடம் கூட ஆகவில்லை, கார் பளிச்!

திரும்பி வந்தான்.

"சரி, புறப்படுங்கோ. இப்ப கிளம்பினாத்தான் இருட்றதுக்குள்ள போய்ச் சேர முடியும்" என்று சம்பத்தையும் தூண்டினான்.

சாருவின் துரிதம் பதினைந்தாவது நிமிடம் அந்த வீட்டு வாசலில் கார் இல்லை. அவள் கழுவிய ரத்தத் திப்பிகள் மட்டும் சீனுவின் கண்ணைக் கரித்தன.

மௌனமாய் அருகே சென்றவர், மண்ணை அள்ளிப் போட்டு மூடிவிட்டு "ராஜும், நான் போய்ட்டு வந்துடறேன்" என்று கிளம்பினார்.

7

தார்ச் சாலையைத் தீண்டவும் திருச்சி போகும் பஸ் வரவும் சரியாக இருந்தது. ஏறி அமர்ந்தார். மனதில் ஒருவித கசகசப்பு.... யாத்திரை கிளம்பும் போது இப்படி கன்றுக்குட்டி பலியான சம்பவம், ஏதோ ஒரு பெரிய விஷயத்துக்கு முன்னோட்டம் போல அவருக்குள் முண்டிக் கொண்டே இருந்தது.

முக்கம்பு அருகே பஸ் சற்றுத் தேங்கியது. எட்டிப் பார்த்தார். அந்த அடிபட்டு உயிரை விட்ட கன்றுக்குட்டி சாலை ஓரமாகக் கிடக்க, சிலர் சுற்றி நின்றிருந்தனர். தேங்கிய பஸ்ஸில், அந்த இடத்தில் ஒருவர் ஏறினார். அவரிடம் முணுமுணுப்பு.

"டிரைவர் சாமி... பாத்துப் போங்க. இப்பத்தான் ஒரு மகராசன் ஓரமாய்ப் போய்க்கிட்டிருந்த கன்னுக்குட்டி மேல ஏத்தி சாவடிச்சுட்டு சிட்டாப் பறந்துட்டான். பாவம் தாய்ப்பசு... கத்து கத்துன்னு கத்திக்கிட்டே கிடக்கு..." என்றார்.



"ஆமா, மாட்டுக்காரன் எங்க...?" என்று சீனு அவன் வாயைப் பிடுங்கினார்.

"அவன் ஒரு செவிட்டுப் பய... கார்க்காரன் அடிச்சுட்டுப் போன பிறகு வர்றான். என்ன பிரயோஜனம்?"

"பாத்து மேய்க்க வேண்டாமா?"

"அட நீங்க வேற சாமி... கன்னு மண்ணு

தெரியாதபடி வேகமா ஓட்டிக்கிட்டு வந்தவனைச் சொல்லாம, பாத்து மேய்க்க வேண்டாமான்னா என்னா அர்த்தம் சாமி?"

சீனுவுக்கு அவனிடம் கேள்வி கேட்க மனத்தில் தைரியமில்லை. அந்த விஷயம் பற்றி யோசிக்கக்கூடப் பிடிக்கவில்லை.

அந்த மடத்துக் கணக்கு வழக்குகளில் ஏகக் குளறுபடிகள். மடத்து மேனேஜர், கணேஷைத் தன் அறைக்கு அழைத்திருந்தார். அவனும் உள்ளே நுழைந்தான்.

''உக்காருங்கோ கணேஷ்... அக்கவுண்ட்ஸ்ல ஏதாவது பிரச்னையா?" எடுத்த எடுப்பிலேயே விஷயத்துக்கு வந்துவிட்டார்.

"ஆமாம் சார்... உங்க கணக்குப்பிள்ளை கொடுத்திருக்கிற வவுச்சர்ஸுக்கும், டோட்டல் அமௌண்ட்டுக்கும் ஒத்தே வர மாட்டேங்குது. பில்லுல வேற நிறைய அடித்தல் திருத்தல்கள். பச்சையா சொல்றேன் சார், இங்க நிறைய ஊழல் இருக்குது..."

"ஆயிரம் பேர் சாப்பிடற இடத்துல சில பருக்கைகள் சிதறத்தான் செய்யும். இங்க நான் எவ்வளவோ விஷயங்களை கரெக்ட் பண்ணியிருக்கேன். தொடர்ந்து பண்ணிக்கிட்டும் வரேன். அடுத்த வருஷம் நீங்க இங்க ஃபைல் பண்ண வரும்போது பாருங்க, எல்லாம் அவ்வளவு சரியா இருக்கும்!"

"இந்த வருஷத்துக்குப் பேசுவோம். கணக்குன்னா சரியா இருக்கறதுன்னு ஒரு பொருள் இருக்கு சார். நம்ம உடம்புலேயே கண், காது, வாய், மூக்குங்கற விஷயங்கள்ல ஒண்ணு குறைஞ்சாலும் நாம முழு மனுஷன் கிடையாது. ஊனமுள்ளவனாயிடறோம்."

"நல்ல உதாரணம்தான். ஒரு பொதுவான அமைப்புல சில தப்புகளைத் தவிர்க்க முடிய மாட்டேங்குது. அதுலையும் நீங்க நம்ம ஊர்க்காரர். அட்ஜஸ்ட் பண்ணி ஹெல்ப் பண்ணுங்க. பை த பை, இந்தத் தடவை உங்களுக்கு ஏ.சி ரூம் அலாட் பண்ணச் சொல்லியிருக்கேன்."

இடையில் மடத்து பூஜை முடிந்து கற்பூர ஆரத்தி அவரைத் தேடி வர, எழுந்து நின்று பவ்யமாகக் கண்களில் ஒற்றிக்கொண்டார். அப்படியே கணேஷ் பக்கமும் அந்த ஆரத்தித் தட்டு நீண்டது.

"நீ போப்பா... சார் ரிச்சுவில்ஸ்ல நம்பிக்கை இல்லாதவர்'' என்றார் மேனேஜர்.

"நேர்மையா இருக்கறதே பெரிய ரிச்சுவில் சார், என் வரைல." என்றபடியே எழுந்தான் கணேஷ். "வேற நபரை வெச்சு அவர் தலைல ஒரு ஐஸ்க்ரீம் ஃபேக்டரியையே வெச்சு, உங்க காரியத்த முடிச்சுக்குங்க. சரியா இருக்கற ட்ரான்சாக்ஷன்களை மட்டும் நான் பாத்து முடிச்சுக் கொடுத்துடறேன்'' என்று புறப்பட ஆரம்பித்தான். மேனேஜர் தொடர்ந்து அசட்டுத்தனமாக ஒரு சிரிப்புச் சிரித்தார்.

கங்கைக்கரை படித்துறைகள் மனித தேகங்களால் முற்றாக மறைந்து கிடந்தன. திமு திமுவென்று வெள்ளம். அதில் மூழ்குவதற்காகவே எங்கெங்கிருந்தோ வந்திருந்தவர்களைப் பண்டாக்கள் மொய்த்துக் கொண்டிருந்தனர்.

ஓடும் ஆற்று நீரில் மூழ்கிக் குளிப்பது என்பது விலை மதிப்பில்லாத ஒரு விஷயம். கணேஷும் வந்திருந்தான். அனுமன்காட்டில் வாரணாசியின் ஒட்டுமொத்த சாக்கடை நீரையும் கங்கைக்குள் திருப்பி விட்டிருந்தனர். அந்தக் காட்சி கணேஷ் வரையில் கண்களை உறுத்தியது.

போனால் போகிறது என்று சற்றுத் தள்ளி நின்று முழுக்கு போட்டுக் கொண்டிருந்தனர். கணேஷால் முடியவில்லை.





## புள்ளி விவரப் புலி!

உலக மக்கள் தொகையில் 18 சதவிகிதம் இளைஞர்கள், இளைஞிகள் கூட்டம்தான். குட்டிப் பாப்பா முதல் 24 வயது பாப்பாக்கள் வரை கணக்கில் எடுத்துக் கொண்டால், இவர்களது எண்ணிக்கை 40 சதவிகிதம். 15 வயதிலிருந்து 24 வயது வரை உள்ளவர்களின் எண்ணிக்கை, உலகம் முழுவதும் 1.1 பில்லியன். நான்கூட ஒரு யூத் புலிதான் தெரியுமா?

மடத்தில் கணக்கில் பிரச்னை... வெளியே கங்கையே பிரச்னையில்... எந்த நம்பிக்கையில் ஒவ்வொருவரும் இந்த ஆற்றில் குளித்தால் பாவம் தீரும் என்று கருதுகின்றனர்?

அவனுக்குள் மனதில் நமைச்சல். அப்போது பார்த்து அவன் செல்போனிடம் சிணுங்கல். அதற்குக் காதைக் கொடுத்தான்.

"கணேஷா... நான் கிருஷ்ணமூர்த்தி பேசறேன்..." அவனது பாஸின் குரல்!

"சொல்லுங்க சார்..."

"மேனேஜர் இப்ப போன் பண்ணினார். அதை நான் பாத்துக்கறேன். நீ, நீயா இரு. ஐ டோன்ட் மைண்ட்... அப்புறம் ஒரு முக்கியமான விஷயம்..."

"என்ன சார்?"

"இங்க குணசீலத்துல இருந்து ஸ்ரீனிவாசன்னு எனக்குத் தெரிஞ்சவர் தன் மனைவியோட யாத்திரையா அங்க வர்றார். அவர் ஒரு வைஷ்ணவர். அலஹாபாத் போய் அங்கதான் கங்கா ஸ்நானம் பண்ணப் போறார்... அவருக்கு உன் அறைல இடம் கொடு. அப்படியே அவர்கூடப் போய் எல்லா உதவிகளையும் செய். உன்னை நான் கைட் ஆக்கறதா நினைக்காதே. எனக்காக இந்த உதவியைச் செய். மிஸ்டர் ஸ்ரீனிவாசன் ஒரு மேன் ஆஃப் கேரக்டர். அவர்கூடப் பழகும்போது நீயே தெரிஞ்சுக்குவே" என்று சொல்ல வேண்டியதைச் சொல்லி முடித்தார்.

கணேஷ் திரும்பினான். அரைக்கிறுக்கு போல ஒரு சன்யாசி அவனையே பார்த்துக் கொண்டிருந்தார். அவன் அருகே வந்தவர், "தம்பி, நீ தமிழ்நாடா?" என்று கேட்க, அவனிடம் ஆமோதிப்பு.

"இந்தப் பையை கொஞ்சம் வெச்சுக்கோயேன். ஒரு முழுக்குப் போட்டுட்டு வந்து வாங்கிக்கிறேன்..." அவர் ஓர் அழுக்கு ஜோல்னாப் பையை நீட்டினார். கணேஷும் மறுபேச்சின்றி வாங்கிக் கொண்டான். அவரும் கங்கைக்குள் இறங்கினார்.

தண்ணீருக்குள் போனவர், அதன்பின் வெளியே வரவேயில்லை. கணேஷுக்கு பதைத்தது.

கங்கைக்குள் சில சன்யாசிகள், பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஜலசமாதியாகி விடுவார்கள். கணேஷே அப்படி சிலரைப் பார்த்திருக்கிறான். இவரும் அந்த ரகமா? கணேஷ் தவிப்போடு அவரது பையைப் பார்த்தான். அதனுள் வழவழப்பான சாளக்கிராமக் கற்கள், சில கிரந்தப் புத்தகங்கள். ஒரு கல்லில் கிருஷ்ணாயுதமான சக்கரம் அப்படியே வார்க்கப்பட்டிருக்க, அதைக் கையில் எடுத்தான். அப்போது படித்துறையில் ஒருவர் "நீர் வேணும்னா பாரும்... நிச்சயம் அந்த கிருஷ்ணன் வரத்தான் போறான். அதர்மம் ஜாஸ்தியாகும்போது நான் வருவேன்னு சொன்னபடி நடக்கத்தான் போறது..." என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

(தொடரும்)

# ஒரு கல்லூரியின் கதை!



☺ படம் ஆரம்பித்தது முதலே ரசிகர்களின் நிலைமை, மிகவும் கடியான ஒரு லெக்சரரின் வகுப்பில் மாட்டிக்கொண்ட மாணவர்களின் நிலைமை போல் ஆகி விடுகிறது.

☺ பல காட்சிகள் மனத்தில் ஒட்டவில்லை. சீரியஸான காட்சிகளில் ரசிகர்கள் தம்மை மறந்து சிரிக்கலாம்.

☺ வழக்கமான கல்லூரி கலாட்டா காட்சிகள் கூட மிஸ்ஸிங்! அட, சார்வியை ஸ்டூடண்ட் போஸ்ட்ல இருந்து, புரொபசரா ப்ரமோட் பண்ணியிருக்காங்களேன்னு நிமிர்ந்து உட்கார்ந்தா, ஒரு கல்லூரிப் பேராசிரியரை எவ்வளவு கேவலப்படுத்த முடியுமோ, அவ்வளவு கேவலப்படுத்துது சார்வியின் கதாபாத்திரம்.

☺ 'ஒரு சத்யாவின் கதை' எனப் படத் தலைப்பை வைத்திருக்கலாம். படம் முழுவதும் நாயகன் சத்யாவின் பெயர் ஒலித்துக்கொண்டே இருக்கிறது.

☺ படத்தில் கெட்டவர்களெல்லாம் டூ மினிட்ஸ் நூடுல்ஸ் மாதிரி இன்ஸ்டன்டாய்த் திருந்தி விடுகிறார்கள் (கல்லூரி தாளாளர், குணா). அட, இப்படி நிஜ வாழ்வில் எல்லாரும் உடனடியாகத் திருந்தினால் எவ்ளோ நல்லாயிருக்கும்!

☺ கதை(!) ஓ.கே திரைக்கதை, வசனம், டைரக்ஷன் சுமார். திரையில் வரும் வசனத்தைவிட ரசிகர்கள் தியேட்டரில் அடிக்கும் கமெண்ட்ஸ் சூப்பர்.

☺ சந்தானத்தின் 'லொள்ளு சபா'த்தனமான ஜோக்குகள் பெரிய திரையில் எடுபடவில்லை.

☺ சோனியா அகர்வால் கதையைப் புரிந்துகொண்டு நடித்தாரா, இல்லை புரியாமல் நடித்தாரா, எதுவும் புரியவில்லை!

☺ படத்தின் பெரிய ஆறுதல் யுவனின் பின்னணி இசை + 'காதல் என்பது', 'கண்கள் கலங்கிட' பாடல்கள்.

☺ 'தீப்பிடிக்க' நடிப்பில் வளர்ந்து வரும் ஆர்யா, கதைத் தேர்வில் இன்னும் கூடுதல் கவனம் செலுத்த வேண்டும்.

**- லஜ்ஜாவதி**

## 360 டிகிரி

ஒரு புகைப்படத்தில் நீங்கள் இருக்கிறீர்கள். உங்களுக்கு எதிரே, பக்கவாட்டில் உள்ளவை அந்தப் புகைப்படத்தில் தெரியுமா? அதெப்படித் தெரியும் என்கிறீர்களா? அது 360 டிகிரி புகைப்படம் என்றால், எல்லாம் தெரியும்! 360 டிகிரி? நீங்கள் ஓர் அறையின் மையத்தின் நின்று கொண்டிருக்கிறீர்கள். ஒரே ஷாட்டில் அந்த அறை முழுவதையும் புகைப்படம் எடுப்பதே 360 டிகிரி புகைப்படம். இதற்கென பிரத்யேகமான கேமரா உள்ளது. இவ்விதம் எடுக்கப்பட்ட புகைப்படங்களை www.0-360.comல் காணலாம். இனி சுத்திச் சுத்தி புகைப்படம் எடுக்க வேண்டாம். ஒரே போட்டோ எடுத்தாலும் அதைச் சுத்திப் பார்க்கலாம்.

# கூட்டாஞ்சோறு!

## டௌன்லோட்:

சிலரோட சிஸ்டத்தை ஆன் பண்ணிட்டு, அதுல விண்டோஸ் பூட் ஆகி சிஸ்டம் ரெடி ஆகுறதுக்குள்ள, பக்கத்துத் தெரு ப்ரீத்தி கிட்ட போய் ஒரு பதினைஞ்சு நிமிஷம் கடல போட்டுட்டு வந்துடலாம். அவ்ளோ ஸ்லோவா இருக்கும். ஏன்னா 'ஸ்டார்ட் அப்'ல நமக்கே தெரியாம ஏகப்பட்ட அயிட்டங்கள் உட்கார்ந்திருக்கும். அதை எப்படி நாம மேனேஜ் பண்ணறது? homepages.paradise.net.nz/amorgan1/index.htm-க்கு போங்க! அங்க 'விண்டோஸ் ஸ்டார்ட் அப் மேனேஜர்' இருக்காரு. இவர் மூலமா 'ஸ்டார்ட் அப்'ல தேவையில்லாம உட்கார்ந்திருக்கிற விருந்தாளிகளை (அப்ளிகேஷன்ஸ்) இலவசமா விரட்டி அடிக்கலாம். புதுசா யாரையாவது 'ஸ்டார்ட் அப்' லிஸ்ட்ல சேர்க்கணும்னா கூட, சேர்த்துக்கலாம். இனி உங்க விண்டோஸ் உங்களை விட சுறுசுறுப்பா இருக்கும். ஓகேவா!

## கீற்று:

தத்துவம் முதல் பின்நவீனத்துவம் வரை இலக்கியப் பக்கத்தை நாம் மேய்ந்து கொண்டிருக்கும்போதே, பக்கத்தில் 'நளபாகத்தின்' வாசனை மூக்கைத் துளைக்க, வெஜிடபிள் பிரியாணியை சுவைக்க நம் மௌஸின் நாக்கு கிளம்புகிறது. எதையோ காரமாக உணர முடிகிறதே... அட சிற்றிதழ்கள்! காசி ஆனந்தன், ஜெயபாஸ்கரன், சுரேஷ்... எல்லாம் பரிச்சயமான பெயர்களாகப்படுகிறதே! அட, கவிதைகள்! கொஞ்சம் மசாலா வாடையும் அடிக்கிறதே, ஓஹோ, சினிமா! மாத்திரை போல் ஏதோ கசக்கிறதே, ஓ... மருத்துவம்! எல்லாம் கலந்த கூட்டாஞ்சோறு தமிழ்த்தளம் keetru.com. பல பத்திரிகைகளின் பக்கங்களை அங்கங்கே கிழித்து மொத்தமாக ஒட்டி வைத்திருக்கிறார்கள். சுவை!

- வலைஞன்



# வலை பாயுதே

# ரஜினியிடம் ஏமாந்தேனா?

'ரஜினியின் அடுத்த படம் இவருக்குத்தான் என்று கோலிவுட்டின் அனைத்துக் கைகளும் நீண்டது எடிட்டர் மோகனை நோக்கித்தான். தற்போது அந்த வாய்ப்பு ஏவி.எம்முக்குச் சென்றுவிட, இப்பொழுது தமது மகன்கள் ஜெயம் ரவி, ராஜா கூட்டணியை வைத்து 'சம்திங் சம்திங் உனக்கும் எனக்கும்' படத்தைத் தயாரிக்கக் கிளம்பி விட்டார். இந்தச் சூழலில் அவரது மனநிலையை அறிய 'சம்திங்' படப்பிடிப்புத் தளத்தில் சந்தித்தோம்.

**இரு மகன்களும் நல்ல நிலைமையில் இருக்கிறார்கள். இப்பொழுதாவது நீங்கள் ஓய்வு எடுக்கலாமே?**

"நான் பல வருடங்களாகத் தமிழ் சினிமாவில் எடிட்டராகவும், தயாரிப்பாளராகவும் இருந்து வருகிறேன். வீணை பாலசந்தர், விட்டலாச்சார்யா, தேவர் ஃபிலிம்ஸ் என்று பணிபுரிந்துள்ளேன். ஐம்பது வருட பழுத்த அனுபவம். அவ்வளவு சுலபமாக ஒதுங்கிவிட முடியாது. என் மகன்கள் திரைத்துறைக்கு வந்த பிறகு சுமை மேலும் அதிகமாகி விட்டது. ஆனால் என் மகன்களை நான் ஆளாக்குவது பலருக்கும் பிடிக்கவில்லை. ஒரு தகப்பன் தம் பிள்ளைகளுக்கு அனுபவ அறிவை ஊட்டுவது எப்படித் தவறாகும்?"

**'படத்தின் வெற்றியைச் சரியாகக் கணிப்பவர்' என்கிறார்களே உங்களை...?**

"'காதல்' படத்தின் முதல் ஷோ பார்த்துவிட்டு, படத்தில் பணியாற்றிய அனைவருக்கும் பொக்கே அனுப்பி 'படம் வெற்றி' என்கிற செய்தியை உடனடியாக அனுப்பினேன். 'திருடா திருடி' படம் பாத்துவிட்டு 'நிம்மதியா தூங்குப்பா' என்று அதன் இயக்குனருக்குத் தகவல் அனுப்பினேன். என் ஒவ்வொரு தெலுங்குப் பட ரிலீஸின்போதும், 'படம் நிச்சயம் ஹிட். எத்தனை நாள் ஓடும் என்பதை ரசிகர்கள் தீர்மானிப்பார்கள்' என்று பகிரங்கமாக அறிவிப்பேன். இதுதவிர எப்போதும் திரையுலகினர் என் கருத்துகளைக் கேட்க முன்வருவார்கள். சில சமயம் கேட்க மாட்டார்கள். சமீபத்தில் ஜெயம் ரவியிடம் கால்ஷீட் கேட்டு வந்த ஒரு பிரபல இயக்குனரிடம், 'இந்த மாதிரி கதையெல்லாம் ஓடாதுங்க. தமிழ் ரசிகர்கள் மாறிவிட்டார்கள்' என்றேன். கேட்கவில்லை அவர். இப்பொழுது திரைக்கு வந்திருக்கும் அந்தப் படம் தோல்வியடைந்து விட்டது. நான் 'ஜெயிக்கும்' என்றால் படம் ஜெயிக்கும். 'ஓடாதென்றால்' நிச்சயம் ஓடாது!"

**தமிழைவிட தெலுங்குத் திரையுலகின் மீது அப்படியென்ன காதல்?**

"நான் மதுரைக்காரன். ஆனால் பாருங்கள், என்னை தெலுங்குக்காரன் என்றே பலரும் நினைக்கிறார்கள்.



• எடிட்டர் மோகன்



• 'சம்திங்...' படத்தில்...

எனக்கு தெலுங்குத் திரைப்பட உலகின் நேர்த்தியான அணுகுமுறையும் நேர்மையான பிசினஸும் மிகவும் பிடிக்கும். என்னை இன்றைக்கும் 'வாவா' என்று தெலுங்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள் ஓயாது அழைக்கிறார்கள். என்ன செய்வது? இங்கே என் இரு விதைகளை விதைத்திருக்கிறேன்!

தமிழ் சினிமாவில் பணம் வைத்திருப்பவர்கள் எல்லாம் தயாரிப்பாளராகி விடுகிறார்கள். இதனால் தமிழில் நூறு படங்கள் எடுத்தால் பத்துகூட ஜெயிப்பதில்லை. சினிமாவைப் பற்றித் தெரியாதவர்களெல்லாம் படம் எடுக்கிறார்கள். அதே போல் ஒரு ஹீரோ, தயாரிப்பாளரையும் இயக்குனரையும் தேர்வு செய்வதும் தவறான நடைமுறை. தமிழில் மட்டுமல்ல, தெலுங்கிலும் தயாரிப்பாளர்கள் தற்கொலைக்கு முயற்சிப்பதுண்டு. மற்றபடி இக்கரைக்கு அக்கரை பச்சைதான். சினிமாவில் மட்டும் விரோதிகள் வெளியில் இருக்க மாட்டார்கள். உள்ளேயேதான் சுற்றிக் கொண்டிருப்பார்கள்."

**ஏற்கெனவே ஜெயம் ரவியின் 'ராஸ்கல்' படத் தலைப்புக்கு எதிர்ப்புகள் உருவான நிலையில், மீண்டும் 'சம்திங் சம்திங் உனக்கும் எனக்கும்' என்று ஆங்கிலத்தில் தலைப்பு வைத்திருப்பது ஏன்?**

"தமிழ்நாட்டில் உழவன், ரிக்ஷாகாரன் முதல் எல்லோருக்கும் பரவலாகத் தெரிந்த வார்த்தைதான் சம்திங். இது கிட்டத்தட்ட தமிழ் வார்த்தை என்பதுபோல் நம் வாழ்வில் இரண்டறக் கலந்துவிட்டது. இதைப் போய் ஆங்கில வார்த்தை என்றால் நம்ப முடியாது. எதிர்ப்பு கிளம்பினால் 'உனக்கும் எனக்கும்' மட்டும் வைத்துக் கொள்வோம். சிம்பிள்."

**ரஜினி படம் செய்வதாக இருந்தீர்களே, என்ன ஆயிற்று? உங்களைக் காக்க வைத்துவிட்டு அவர் ஏவி.எம்மிடம் சென்றுவிட்டதாகவும் நீங்கள் ஏமாற்றப்பட்டதாகவும் கூறப்படுகிறதே?**

"நான் ரஜினி படத்தை செய்கிறேன் என்று எங்குமே கூறியதில்லையே. ப்ரஸ் மீட்டில் கூட ரஜினி படத்துக்கான பேச்சு வார்த்தை மட்டுமே நடந்தது என்றே கூறினேன். ஆக, இதில் எங்கே நான் ஏமாற்றப்பட்டேன்? மற்றபடி இதுபற்றி மேலும் பேச விரும்பவில்லை."

• **ச.ந.கண்ணன்**



## -எடிட்டர் மோகன் பதில்








# "பொடா ரத்து வைகோவின்

● கே.ஆர். தேவேந்திரன், வேலூர்.

? நடிகைகளைப் பற்றி அவதூறாகப் பேசிய தங்கர்பச்சானை மன்னிப்புக் கேட்க வைத்த நடிக - நடிகையர்கள், நள்ளிரவில் கிழக்கு கடற்கரைச் சாலையில் கும்மாளம் போட்டதாக த்ரிஷா மீது குற்றச்சாட்டு எழுந்தபோது மௌனமாக இருந்தது ஏன்...?

! த்ரிஷாவை கமிஷனர் நேரடியாகவே கண்டித்திருக்கிறார். அதற்குத் திரையுலகில் யாரும் எதிர்ப்புத் தெரிவிக்காதபோது, அதை ஒப்புக் கொள்வதாகத்தானே அர்த்தம்!

● எஸ். சுவாமிநாதன், மன்னார்குடி.

? "அகில இந்திய அரசியலில் கலைஞர் அக்கறை செலுத்தாவிட்டால், அந்த இடத்தை எந்தப் பூணூல் பிடித்துக்கொள்ளும் என்று எனக்குத் தெரியாது. பூணூல் மட்டுமல்ல, புடைவைகூட பிடித்துக் கொள்ளலாம்..." என்று வேலூர் தி.மு.க மாநாட்டில் அன்பழகன் பேசியிருப்பது குறித்து...?

! பூணூலுக்கு பயந்தவர்கள், இப்போது புடைவைக்கும் பயப்பட ஆரம்பித்திருக்கிறார்கள்! இந்த இலட்சணத்தில், மகளிர் இட ஒதுக்கீடுக்காகப் பேரணியாம், வெட்கக்கேடு!

● ஜி. மாரியப்பன், சின்னமனூர்.

? "நான்தான் அடுத்த முதல்வர் என்று எங்கேயும் நான் சொன்னதில்லை" என்கிறாரே விஜய டி. ராஜேந்தர்?

! அடிச்சாரே ஜோக்கு! ஆஹா, என்ன சம நோக்கு; வாழ்க இந்தப் போக்கு!













# வெற்றி" என்கிறாரே பிரதமர்?

● ஆர். ராஜதுரை, சீர்காழி

? தமது பிறந்தநாளையொட்டி, தமிழ் நாட்டில் உள்ள கோயிலில் சாமி கும்பிடாமல், ஆந்திர மாநிலத்திலுள்ள திருப்பதிக்குச் சென்று விஜயகாந்த் சாமி கும்பிட்டது சரியா...? இதுதான் கேப்டனின் தமிழ்ப் பற்றா...?

! டாங்க்ஸ் தலீவா! தமிழர் பாதுகாப்பு இயக்கத்துக்குப் பாயின்ட் எடுத்துக் கொடுத்ததுக்கு!

● ஏ.ஜி. முகம்மது தௌபீக்,
திருநெல்வேலி - 5.

? வெற்றிப்படிகளில் பயணித்துக் கொண்டிருக்கும் சானியா மிர்ஸா பற்றி...?

! இவருடைய தோல்விகள்கூட அழகாயிருக்கின்றன. அமெரிக்க ஓப்பனில் இவரை வென்ற மரியா ஷரபோவா, வாய் நிறைய வாழ்த்தியிருப்பது, இன்னொரு அர்ஜுனா விருதுக்கும் மேலான ஊக்கம் தரும்.

● எம். பாஸ்கர், திண்டுக்கல்.

? 'நோபல் பரிசுக்குத் தகுதியானவர் கருணாநிதி' என்று நிர்மலா சுரேஷ் கூறியுள்ளாரே...?

! எம்.பி/எம்.எல்.ஏ பதவிக்குப் போட்டியிடத் தகுதியானவரா நிர்மலா சுரேஷ் என்பதை, கருணாநிதி முடிவு செய்வார்.

★ சோஃபி எபினேசர், திண்டுக்கல்.

? எங்கு பார்த்தாலும் செல்போன்தான் என்கிற நிலையில், அவற்றின் மூலம் ஆபாசப் படங்கள், செய்திகள் பரிமாற்றம், தொந்தரவு என்று வில்லங்கங்கள் வந்துகொண்டேயிருக்கின்றன. இளைஞர்களின்

எதிர்காலத்தை உத்தேசித்து அரசு இதில் தலையிடுமா...?

! செல்போன் உற்பத்தி, விற்பனை, உரிமம், வலைப்பரப்பு போன்றவை மூலம் எப்படிப் பணம் பண்ணலாம் என்பது தான் அந்தந்த நிறுவனங்கள் மற்றும் அரசின் குறியாக இருக்கும். அவரவர் எதிர்காலத்தை சுயக் கட்டுப்பாடுடன் அவரவர் தான் நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். அரசல்ல!

● க.நா. இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்.

? எஸ்.ஜே. சூர்யா கைது சம்பவம் பற்றி...?

! உடனே ஜாமீனில் வெளிவந்து விட்டார். உச்சநீதிமன்றமும் 'நியூ' படத்தின் மீதான தடையை நீக்கி வழக்குப் பதிவு செய்து கொண்டுள்ளது. ஆனால், 'அ-ஆ' படத்துக்கு விழுந்த 14 சென்ஸார் வெட்டுகளை சூர்யா மறுபேச்சின்றி ஏற்று, ஒரு டயலாக்கை மாற்றவும் ஒப்புக் கொண்டிருக்கிறார்.

● ச. சாந்தி, கரூர்.

? வறுமை ஒழிப்புப் பிரசாரத்தில் ஏ.ஆர். ரஹ்மான் ஈடுபடவுள்ளது பற்றி...?

! பிரசாரத்தோடு விஷயம் முற்றுப் பெறாது. செயல் திட்டங்கள், வேலைவாய்ப்புகள் வேண்டுமே வறுமையை ஒழிக்க...! எனினும், சிறு வயதில் தாம் வறுமையில் கஷ்டப்பட்டதை மறக்காமல், இப்போது நல்ல நிலைமை அடைந்ததும் பிறருக்கு உதவ முன்வந்துள்ள ரஹ்மானின் 'சின்னச் சின்ன ஆசை'யைப் பாராட்டுவோம்!

● லெ.நா. சிவகுமார், சென்னை - 33.

? “பொடா சட்டம் ரத்து செய்யப் பட்டது வைகோவுக்குக் கிடைத்த வெற்றி” என்று பிரதமர் கூறியுள்ளாரே...?

! இப்போது புரிகிறதல்லவா...? சித்த வைத்திய ஆராய்ச்சி மையத் தொடக்க விழாவுக்கு வரவிருந்த முதல்வரின் உடல்நிலை திடீரென ஏன் சரியில்லாது போயிற்று என்று...!



● சின்னப்பிள்ளை



● நிர்மலா சுரேஷ்

❑ எஸ். கௌரிலக்ஷ்மி,
திருச்சி - 6.

? சில மாநிலங்களுக்கு மட்டும் வரிச் சலுகை வழங்கப்படுவதை மத்திய அரசு உடனே நிறுத்த வேண்டும் என்கிறாரே ஜெ?

! சில மாநிலங்கள் மக்கள் உழைப்பாலும், ஆட்சியாளர்களின் திறமையாலும் வேகமாக முன்னேறுகின்றன. வேறு சில, பின்தங்கி விடுகின்றன. பின்தங்கிய மாநிலங்களுக்கு வரிச் சலுகைகள்; அதிக திட்ட நிதி ஒதுக்கீடு போன்றவை சமத்துவப் பார்வை. ஆனால் இதுவே ஆற்றலுக்கு தண்டனை; சோம்பலுக்கு வெகுமதி என்றாகி விடுகிறது! பொருளாதாரத்தில் போட்டா போட்டியை ஏற்பவர்கள், மாநிலங்களுக்கிடையேயான போட்டா போட்டியையும் ஊக்குவிக்கவே வேண்டும். இடையூறு செய்யக்கூடாது.

● கே.எம். ஜான், இளையான்குடி.

? அரசியல் நிர்ப்பந்தங்களுக்கு மகளிர் சுய உதவிக் குழுக்களை முதல்வர் ஜெயலலிதா பணிய வைக்கிறார் என்று வாசன் சொல்கிறாரே?

! அந்தக் குழுக்களுக்கு, அவை இடம்பெறும் தொகுதிகளின் எம்.பிக்களைத் தலைவர்களாக்கும் திட்டத்தை மத்திய அரசு அறிவித்துள்ளதே! அனைத்து அரசியல்வாதிகளுக்கும் இந்தக் குழுக்களின் ஒருங்கிணைப்பு, கட்டுப்பாடு, உழைப்பு, உள்ளூர் செல்வாக்கு ஆகியவை மீது ஒரு கண் என்கிற நிலை. இந்த அரசியல் அலம்பல்களுக்கிடையே, மாபெரும் ஒருங்கிணைப்பாளரான சின்னப்பிள்ளையின் குரல் பெரிதாக ஒலித்து ஆறுதல் தருகிறது: “சுய உதவிக் குழுக்கள் அரசியல்மயமாகமாட்டா!” ○

❑ ரூ 100 பரிசு பெறுபவர்:
எஸ். கௌரிலக்ஷ்மி,
12, 'அகிலா',
2, வி.எஸ்.அய்யர் தெரு,
ரங்கநகர், ஸ்ரீரங்கம்,
திருச்சி - 620 006

★ ரூ 50 பரிசு பெறுபவர்:
சோஃபி எபினேசர்,
சங்கீத கலை சாலை,
20 D, அன்னை நகர்,
ஒய்.எம்.ஆர்.பட்டி,
திண்டுக்கல் - 1.

# உங்கள் கம்ப்யூட்டரில் திருடன்..!

**தமிழக சைபர் க்ரைமின் இணை ஆணையாளர் பாலு, சமீபத்தில் சிங்கப்பூரில் நடைபெற்ற, சைபர் குற்றங்களைத் தடுப்பது குறித்த உலகளாவிய மாநாட்டில் இந்தியாவின் சார்பாகக் கலந்து கொண்டு திரும்பியுள்ளார். அது குறித்த தம் அனுபவங்களை நம்மிடம் விவரித்தார்.**

• இணை ஆணையர் பாலு

“இந்தியாவில் கிரெடிட் கார்டு புழக்கம் குறைவாக இருப்பதால் அது சம்பந்தமான குற்றங்களும் புகார்களும் மிகக் குறைவு. ஆனால் வெளிநாட்டில் மூளையைக் கசக்கி விதவிதமான குற்றங்களைப் புரிகிறார்கள். மலேஷியாவில் இது அதிகமாக இருக்கிறது. கடைகளில், பெட்ரோல் பங்குகளில் கிரெடிட் கார்டு கொடுக்கும்போது 'ஸ்கிம்மர்' என்கிற கருவியைப் பயன்படுத்தி, அதிலுள்ள தகவல்களை ரகசியமாக எடுத்து விடுகிறார்கள். இதை வைத்து போலி கிரெடிட் கார்டுகளை சுலபமாகத் தயாரித்து விடுகிறார்கள். இதை விடுங்கள், போலி ஏ.டி.எம். சென்டரையே பக்காவாக நிறுவி கஸ்டமர்களை ஏமாற்றுகிறார்கள். இதை முற்றிலும் தடுப்பதற்காக கிரெடிட் கார்டுகளில் சிப் கார்டுகளைப் பொருத்த மாநாட்டில் முடிவெடுக்கப் பட்டுள்ளது.

இன்டர்நெட் குற்றங்கள் இன்னமும் ஆச்சர்யமூட்டுகின்றன. கிட்நாப்பிங் செய்வதுபோல் யாருக்கும் தெரியாமல் கம்ப்யூட்டரிலுள்ள தகவல்களை டெக்னிக்கலாகத் திருடி, வெளியே காசுக்கு விற்று விடுகிறார்கள். ஒரு இணைய தளத்தை 'ஹேக்கிங்' செய்வது என்பது இன்று சர்வ சாதாரணமாகி விட்டது. வங்கிகளின் உண்மையான வெப்சைட் போல போலியாக உருவாக்கி, அதன் கஸ்டமர்களை ஏமாற்றுகிறார்கள். இந்தியாவைப் போல வெளிநாடுகளிலும் சைபர் க்ரைம் பற்றிய விழிப்புணர்வு மிகவும் குறைவாக இருப்பது இம்மாநாட்டின் மூலம் தெரியவந்துள்ளது.

கம்ப்யூட்டர், இன்டர்நெட் குற்றங்களைக் களைய ஒவ்வொரு கம்ப்யூட்டரிலும் 'ஃபையர் வால்' (fire wall) பொருத்தப்பட வேண்டும். அதேபோல் உங்களுக்குத் தெரியாமல் உங்கள் கம்ப்யூட்டருக்குள் நுழையும் திருடர்களைத் தடுக்கத் தனி சாஃப்ட்வேர்கள் உள்ளன. தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தினால் மட்டும் போதாது. அதற்கான பாதுகாப்பு வழிமுறைகளையும் தெரிந்துகொண்டு செயல்பட்டாலொழிய இந்தக் குற்றங்களைக் களைய முடியாது.

சமீபகாலமாக சைபர் குற்றங்கள் அதிகரித்துள்ளதால், அதன் சட்ட செயல்பாடுகள் பற்றி மற்ற நாட்டு அதிகாரிகளிடம் விவாதித்தது உபயோகமாக இருந்தது. புதிதாக செல்போன் க்ரைம்களும் நாட்டில் மலிந்துவிட்டன. இது போன்ற குற்றங்களில் ஈடுபடுபவர்கள் விளையாட்டாகவும் பொழுதுபோக்குக்காகவும்தான் செய்கிறார்கள். இறுதியில் அதுவே வினையாகி விடுகிறது. நம் ஊரில் இந்தக் குற்றங்கள் பெருகாமல் இருக்க, சென்னை கமிஷனர் உதவியோடு பல விழிப்புணர்ச்சிக் கூட்டங்களை நடத்த உள்ளோம்” என்றார்.

- செந்தில்



# வைகோ படித்த 2300 புத்தகங்கள்!

அண்மையில் சென்னையில் நடைபெற்ற சித்த மருத்துவ ஆராய்ச்சி நிலையத் தொடக்க விழாவில் பிரதமருடன், முதல்வர் ஜெயலலிதாவும் கலந்து கொள்வதாக இருந்தது. அவர் கடைசி நேரத்தில் வராமல் போனதற்கு ஒரு புத்தகம்தான் காரணம் என்று சொல்லப்படுகிறது. அது ம.தி.மு.க. பொதுச் செயலாளர் வைகோ எழுதி, பிரதமரால் வெளியிடப்பட்ட 'சிறையில் விரிந்த மடல்கள்!'

'பொடா' சட்டத்தின்கீழ் கைது செய்யப்பட்டு, ஏறத்தாழ பத்தொன்பதரை மாதங்கள் சிறையிலிருந்தபோது, தமது கழகத் தொண்டர்களுக்கு, 'சங்கொலி' பத்திரிகையில் வைகோவால் எழுதப்பட்ட கடிதங்களின் தொகுப்பே இந்நூல். வெளியிட்டுள்ளது கண்மணி பதிப்பகம், பதிப்பாளர் வேறு யாருமல்ல, வைகோதம் புதல்விதான். இவர் அமெரிக்காவில் இருப்பதால், பதிப்பக நிர்வாகத்தை வைகோவின் செயலரும், இப்புத்தக உருவாக்கத்தில் உதவியவருமான அருணகிரிநாதன் கவனித்துக் கொள்கிறார். இந்நூல் உருவான பின்னணி குறித்து நம்மிடம் பேசினார்.

"வழக்கமாகத் தொண்டர்களுக்குக் கடிதம் எழுதுபவர்தான் வைகோ. ஆனால் சிறைக்குச் சென்று விட்டதால் சுமார் மூன்று மாதங்கள் அவரால் கடிதம் எழுத முடியவில்லை. 2002 ஜூலை மாதம் கலைஞர் வேலூருக்குச் சென்று வைகோவைச் சந்தித்தார்... அந்த நிமிடத்திலிருந்து எழுதப்பட்ட வார்த்தைகள்தாம், இன்று சிறையில் விரிந்த மடலாக உருப்பெற்றுள்ளது. இந்த ஒண்ணே முக்கால் வருஷ காலத்துல, கிட்டத்தட்ட 2300 புத்தகங்களுக்கு மேல் படிச்சு, ஆய்வு நெஞ்சு, கடிதங்கள் மூலம் அவற்றின் சாரத்தைப் பகிர்ந்து கொண்டிருக்கிறார். மொத்தமாகச் சிறையிலிருந்து எழுதப்பட்டவை அறுபத்தியாறு. கட்சி செய்திகள் அதிகமாக இருக்கிற கடிதங்களை விட்டுட்டு, மற்றதை புத்தகமாக் கிட்டோம்" என்றவரிடம்,

"சிறையிலிருந்து எப்படி உங்களுக்கு இந்தக் கடிதங்கள் வரும்... அதை எப்படிப் பத்திரிகையில் பிரசுரிப்பீர்கள்?" என்றதற்கு,

"நானும், எங்க கட்சியோட செய்தித் தொடர்



## "15 சீட்டு ரிஜிஸ்டர்!"

'அடேயப்பா!' போடும்படி அசத்தலாக நடந்திருக்கிறது 'சிறையில் விரிந்த மடல்கள்' நூல் வெளியீட்டு விழா.

- விழாவில் வைகோவுக்கு அடுத்து மிகப் பரபரப்பாக வளைய வந்தவர் அவரது மகன் துரை வையாபுரி.

- கலைஞரை ஒரு பக்கம் வைகோவும், இன்னொரு பக்கம் தானுவும்(!) கைத்தாங்கலாக அழைத்து வந்தனர். அவர் மேடை வழியாகத்தான் ஓய்வறைக்குச் சென்றார். அப்போது அரங்கத்தில பெயருக்குக் கூட ஆரவாரமில்லை. ஆனால் வைகோ தி.மு.க. மாநாட்டிற்குள் நுழைந்தபோது ஏற்பட்ட ஆரவாரம் அடங்க வெகு நேரமானதாக நிருபர் ஒருவர் கிசுகிசுத்துக் கொண்டிருந்தார்.




பாளர் நன்மாறனும், வாராவாரம் சிறைக்குச் சென்று பார்வையாளர்கள் நேரத்துல அவரைச் சந்திப்போம். அப்போ பேப்பர்ல எழுதின சில குறிப்புகளைத் தருவார். சில சமயத்துல, அவரே வாயால டிக்டேட் பண்ண, நாங்க எழுதிக்குவோம். கோர்ட்டுக்கு வரும்போது, காலைல இருந்து மாலை வரைக்கும் காத்திருக்க வேண்டியிருக்கும். அப்போதான் அதிகமா கடிதத்துக்கான குறிப்புகளை டிக்டேட் பண்ணுவார்... சின்னச் சின்ன குறிப்புகள்ங்கறதால அதை யாரும் வாங்கிப் பார்த்து, சோதனையெல்லாம் செய்ய மாட்டாங்க... என்ன ஒரு கஷ்டம்னா, நாங்க பேசிக்கிட்டு இருக்கறப்போ பக்கத்துலயே ஆபீசர்ஸ் இருப்பாங்க... அதன் பிறகு அந்தக் குறிப்புகளை வைத்துக் கடிதமாக்கி, திரும்ப வைகோகிட்ட காண்பிச்சு, அவர் கரெக்ஷன் போட்ட பிறகு பத்திரிகைல போடுவோம்" என்றார்.


• அருணகிரி


• முஜுசாமி

"இதைப் புத்தமாக்க வேண்டும் என்ற எண்ணம் எப்போது, யாருக்கு வந்தது?"

"முதல் கடிதம் வெளியிடப்பட்ட உடனேயே அந்த எண்ணம், வைகோவுக்கு வந்துவிட்டது. அந்த நிமிடமே புத்தகப் பணியினை ஆரம்பித்து விட்டோம். சிறையிலிருந்து வெளிவந்த பிறகு, கடிதங்களை டைப் செய்வது, பிழைதிருத்தம் செய்வது, திரும்பப் படித்துப் பார்ப்பது, மேலும் மெருகேற்றுவது என்று ஒவ்வொரு நிலையிலும் வைகோ ஆர்வமாக இருந்து கவனித்தார். 'இந்த வார்த்தைக்குப் பதில் வேறு வார்த்தை இருந்தால் நன்றாக இருக்கும்' என்று சொல்லி அதை மாற்றுவார்... நடைப் பயணம், தேர்தல் பிரசாரம், கட்சிப்பணி, அமெரிக்கப் பயணம் என்று எது இடையூறாக இருந்தாலும், இதற்கென நேரம் ஒதுக்கினார். எங்கு சென்றாலும் அங்கிருந்து போன் செய்து புத்தகப் பணி பற்றிய

• விழாவுக்கு வந்திருந்த தலைவர்கள் பலரும், ஓய்வறைக்குச் சென்று கலைஞரைப் பார்த்துவிட்டு வந்தனர். ஆனால் ராமதாஸ் மேடையிலேயே இருந்துவிட்டார்.

• வைகோவின் பத்தொன்பது மாத சிறைவாசத்துக்கு யார் காரணமோ, அவருடைய பெயரைக்கூட உச்சரிக்காமல் வைகோ பேசியதில் தொண்டர்களுக்கு வருத்தம்தான். அவருடைய உரையில் வழக்கமான ஆவேசம், ஆக்ரோஷம் எல்லாமே மிஸ்ஸிங்.

• வைகோவுக்குப் பொன்னாடை போர்த்தி, உச்சி முகர்ந்தார் கலைஞர். அப்பொழுதுதான் தொண்டர்கள் ஆர்ப்பரித்து நிமிர்ந்து உட்கார்ந்தனர். "அப்பாடா... 15 சீட்டு ரிஜிஸ்டர் ஆயிடுச்சுப்பா" என்று ஒரு குரல் கேட்டது.

• ஆங்கில மொழி பெயர்ப்பை வெளியிட்ட மன்மோகன் சிங்கிடம் ஆட்டோகிராஃப் வாங்கிக்கொண்ட என்.ராம், வைகோவிடமும் மறக்காமல் வாங்கிக் கொண்டார்.

• கலைஞர் பேசும்போது, 'வைகோவுக்குப் பகுத்தறிவு சிந்தனையில் என்றைக்கும் பிடிப்பு உண்டு. அதன் காரணமாகவே தனது பெயரில் இன்னொரு 'K'வை சேர்த்தால் (Vaikko) வாழ்க்கையில் வெற்றி விரைவாக கிட்டும் என்ற போதும் கூட, அதை மறுத்துவிட்டார். ஒரு வேளை ஒரு 'K' (கலைஞர்) இருக்கும்போது இன்னொரு 'K' எதற்கு என்று விட்டுவிட்டார் போலும்' என்றபோது கூட்டம் கலகலத்தது.

- முராரி

விவரம் கேட்பார். அவருடைய எண்ணத்தை அப்படியே பதிவு செய்ய வேண்டும் என்பதற்காக, நானே ஒவ்வொரு வார்த்தையையும் டைப் செய்வேன். அவர் செய்த பிழைதிருத்தங்களை நானே சரி செய்தேன். இதுவரை எங்களுடைய பதிப்பகத்தில் இருந்து வெளியானவற்றில் அதிக விலை இதற்குத்தான். ரூ.500! ஆனாலும் இதில் இருக்கும் செறிவுமிக்க கருத்துகள், வரலாற்றுச் செய்திகளுக்காக இந்த விலையைத் தரத் தயாராகவே இருக்கின்றனர் வாசகர்கள். இப்பொழுதே விற்பனை நன்றாக இருக்கிறது" என்றார் பூரிப்புடன்.



இந்த நூல் 'From the Portals of a Prison' என ஆங்கிலத்திலும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. மொழிபெயர்த்தவர் முனுசாமி. இவர் வரலாற்றுப் பேராசிரியராகப் பணியாற்றி, சென்னை லயோலா கல்லூரியின் டீனாக ஐந்தாண்டுகள் இருந்து ஓய்வு பெற்றவர்.

## "அவர் நினைத்ததைக் கொண்டு வருவதில் சிரமமாக இருந்தது!"

"வைகோவே மிகச்சிறந்த ஆங்கிலப் புலமையாளர். அப்படியிருக்க, இந்த நூலை மொழிபெயர்க்க என்னை ஏன் தேர்ந்தெடுத்தார் என்ற கேள்வி பலருக்கும் எழுகிறது. நான் பி.ஏ. ஹானர்ஸ் படித்தவன். எம்.ஏ. அரசியல் முடித்து, பிறகு எம்.பில்லும் முடித்தேன். பணியாற்றி ஓய்வு பெற்ற பிறகு, ம.தி.மு.க.வின் அரசியல் ஆய்வு மையக் குழுவில் உறுப்பினராக இருந்தேன். அப்பொழுதே எனது கருத்துகளை வைகோ கூர்ந்து கவனிப்பார். ஆனால் அப்பொழுதெல்லாம் எனக்குத் தெரியாது, இப்படியொரு அபூர்வ வாய்ப்பு எனக்குக் கிடைக்குமென்று.

இந்த நூலை மொழிபெயர்க்க ஒரு பத்திரிகையாளர், ஒரு பேராசிரியர், மொழிபெயர்ப்புத் துறையில் பணியாற்றிய மூத்த அதிகாரி என்று பலரையும் நாடி, இறுதியாக வைகோவே என்னிடம் வந்து கேட்டார். எனக்கென்ன பயம் என்றால், நான் படித்ததும், தாய்மொழியும் தெலுங்கு. தமிழில் அந்த அளவிற்கு நுண்ணிய புலமையெல்லாம் கிடையாது. அதுவும் வைகோவுடைய தமிழோ, வீரியமிக்கது. நம்மால் முடியுமா என்ற அச்சம் இருந்தது. முதல் வாரம் ஒன்றுமே புரியவில்லை. இப்படியே ஒரு மாதப் பணி மிகவும் மெதுவாக நடந்தது. அதன் பின்னர்தான் சூடு பிடித்தது.

காலை ஒன்பது மணிக்கு நானும், அருணகிரியும் பணியைத் துவக்குவோம். இடையில் ஒன்றரை முதல் மூன்று மணி வரை சாப்பாடு, குட்டித் தூக்கம். பிறகு மூன்று மணி முதல் இரவு ஒன்பது மணி வரை பணி. இப்படியே மூன்று மாத காலம் கடுமையாக உழைத்தோம். டைப் செய்து, பிரின்ட் எடுத்து, அதை நானே இரவில் பிழைதிருத்துவேன்.

வைகோவின் எழுத்தில் நான் வியந்தது அவருடைய நுண்ணிய, அதே சமயம் விசாலமான பார்வை... இன்னொன்று புள்ளியே வைக்காமல் சுமார் இரண்டு பக்கங்கள் கூட எழுத முடிகிறது அவரால். நான் வரலாற்றுப் பேராசிரியர் என்பதால், வரலாற்று தொடர்பான செய்திகளில் புகுந்து விளையாடி விடுவேன். ஆனால் அரசியல், கட்சி தொடர்பான செய்திகளில் அருணகிரியின் உதவி தேவைப்படும். ஆனால் எதற்காகவும் வைகோவை நான் தொந்தரவு செய்யவே இல்லை. அவர் நினைத்ததைக் கொண்டு வருவது எனக்குக் கொஞ்சம் சிரமமாகத்தான் இருந்தது. அதே சமயம் இப்பொழுது எனக்கு மன நிறைவு வந்துவிட்டது. எப்படி என்றால் 'Therma Play' என்ற கடிதத்தை நான் மொழி பெயர்த்ததைப் படித்த வைகோ, 'அண்ணே... நான் எழுதினதை விட பத்து மடங்கு உயிரோட்டத்தோட இருக்கு. அதனால இதை மட்டும் நான் மீண்டும் தமிழாக்கம் செய்யப் போறேன்னு சொன்னார்'' என்று நெகிழ்ச்சியுடன் குறிப்பிடுகிறார் முனுசாமி.

- இரா. முத்துக்குமார்

படங்கள்: ராஜன்




ஏ.ஜி.எஸ்.

டெய்லரிடம் தன் சட்டைக்கு அளவு கொடுத்துக் கொண்டிருந்தான் முருகேஷ்... நான் அமைதியாக கவனித்துக் கொண்டிருந்தேன்.

''சார்... இந்த உயரம் முப்பது போதுமா சார்?'' டெய்லர் கேட்க...

''இல்ல, மூணு சென்டிமீட்டர் கூட வைங்க...''

''ரொம்ப உயரமா இருக்குமே சார்!''

''பரவால்ல.... தோச்சா சரியாயிடும்...!''

''அட... இது ஒஸ்தி துணி சார்... சுருங்காது'' சொல்லிவிட்டு, முருகேஷ் சொன்ன அளவையே டெய்லர் குறித்துக் கொண்டார்.

''கை நீளம்... பதினொண்ணு போதுமா சார்..''

''ம்ஹூம்... பதிமூணு வைங்க...''

''சரி.. லூஸ்... இதேவா... இல்ல..?''

''எல்லாமே ஒரு ரெண்டு சென்டிமீட்டர்கூட வைங்க...''

கடையை விட்டு வெளியே வந்ததும் கேட்டேன்.

''ஏண்டா... சட்டைய உனக்குத்தான தச்சுக்கற...? பின்ன ஏண்டா ரொம்ப லூசா ஸ்டிச் பண்ணச் சொன்ன...?''

முருகேஷ் சொன்னான்:

''டேய்.. உங்கிட்ட சொல்றதுல என்ன...? பாவம்டா எங்கண்ணன், சரியான வேலையில இல்ல. ரொம்ப தாழ்வு மனப்பான்மை, எதுவும் வாய்விட்டுக் கேக்க மாட்டாரு... எப்பவாவது என் சட்டைய எடுத்துப் போட்டுக்கிட்டு போனா... அது ரொம்ப டைட்டா இருக்குமா... பாக்கறதுக்கே கஷ்டமா இருக்கும்டா...! அதான் இது மாதிரி!''

என் நண்பனை நினைத்து சந்தோஷத்தில் கண்ணீர் விட்டேன்! எத்தனை பேருக்கு இந்தக் காலத்தில் தானாடாமல் சதையாடுகிறது?

# ஸ்டெம் செல்

சென்னை, செயின்ட் தாமஸ் மருத்துவமனை. நெருங்கிய உறவினரின் சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சைக்காக ஸ்டெம் செல்களை தானம் செய்து கொண்டிருந்தார் ஓர் இளைஞர். அவருக்கே இது புது அனுபவம்! ரத்த தானம் தெரியும். அதென்ன ஸ்டெம் செல்ஸ் தானம்? முதலில் ஸ்டெம் செல்ஸ் பற்றித் தெரிந்துகொண்டால் தானே, அவற்றை தானம் தருவது எத்தனை பெரிய தர்மம் என்று தெரியும். இத்துறையில் தொடர் ஆராய்ச்சியை மேற்கொண்டு வரும், சிறுநீரகவியல் நிபுணர் டாக்டர் பி.ரவிச்சந்திரன் விளக்குகிறார்:

''மருத்துவ உலகில் ஆன்ட்டிபயாட்டிக் மருந்துகள் கண்டுபிடிக்கப் பட்டபோது, சிகிச்சை முறையில் மாபெரும் புரட்சிக்கு வழி பிறந்தது. இப்போது ஸ்டெம் செல்ஸ். மருந்துகள் கண்டுபிடிக்கப்படாத நோய்கள் உட்பட, உடல் நோய்களைச் சுலபமாகக் குணப்படுத்தி விடலாம் என்ற புதிய நம்பிக்கை வெளிச்சத்தை, ஸ்டெம் செல்ஸ் ஆராய்ச்சி கொடுத்து விட்டது.

நமது உடலில் உள்ள கோடிக்கணக்கான உடல் அணுக்கள் ஒவ்வொன்றிலும் ஒரு நியூக்ளியஸ் (மையக் கரு) உண்டு. நியூக்ளியஸில் உள்ள அணுக்கள் தம்மைத் தாமே வளர்த்துக் கொள்ள 'ஸ்விட்ச் ஆன்' மெக்கானிசமும், தம்மைத் தாமே அழித்துக் கொள்ள 'ஸ்விட்ச் ஆஃப்' மெக்கானிசமும் கொண்டவை. இதனால்தான் பழைய அணுக்கள் அழிந்து, புதிய அணுக்கள் உருவாகின்றன. ஆனால் தன்னைத் தானே அழித்துக்கொள்ளும் 'ஸ்விட்ச் ஆஃப்' மெக்கானிசம், ஸ்டெம் செல்லுக்கு மட்டும் கிடையாது. இது தான் இயற்கையின் அதிசயம்!

இந்த ஸ்டெம் செல்களை மனித உடலில் எங்கே போய்த் தேடுவது? இங்கேதான் பெண்களின் கருப்பையை முன்பு எப்போதும் இல்லாதபடி ஒட்டு மொத்த மருத்துவ விஞ்ஞானமும் கைகூப்பி வணங்குகிறது. கருமுட்டையிலிருந்துதான் ஸ்டெம் செல்கள் கிடைக்கின்றன. ஒரு பெண்ணின் அண்டம் (முட்டை), அதனைத் துளைத்து உள்ளே செல்லும் ஒரு விந்தணு, இரண்டும் இணைந்தே 'எம்பிரியோ' எனப்படும் கருமுட்டை உருவாகிறது. இது இரண்டு, நான்கு, எட்டு, பதினாறு என படிப்படியாக வளர்ந்து, அறுபத்துநான்கு ஸ்டெம் செல்களாக வளர்ச்சியை அடையும்போது அடுத்த கட்ட அதிசயம் நிகழ்கிறது.

அதாவது கருமுட்டையில் உள்ள சில ஸ்டெம் செல்கள் இணைந்து, 'நான் இதயமாக மாறுகிறேன்' என்று போய்விடும். சில சிறுநீரகம், சில நுரையீரல், சில கணையம், சில எலும்புகள், சில கண்கள் என தனக்குத்தானே உத்தரவு கொடுத்துக் கொண்டு உடல் உறுப்புகளாக மாறிவிடுகின்றன. இதனால் ஸ்டெம் செல்களை தமிழில் 'விதையணுக்கள்' என்று அழைக்கலாம். stem என்ற சொல்லுக்கு ஒன்றிலிருந்து உருவாகுதல் என்று பொருள். கருவிலிருக்கும் விதையணுக்களை 'எம்பிரியானிக் ஸ்டெம் செல்ஸ்' என்கிறோம். தாயின் கருப்பையிலிருந்து குழந்தை வெளியே வந்த பிறகு, சில ஸ்டெம் செல்கள் மட்டும் உறுப்பாக

• அடல்ட் ஸ்டெம் செல்களை தானம் தரும் இளைஞர்...



மாறாமல் எலும்பின் மஜ்ஜைகளில் (எலும்பின் உள்ளே இருக்கும் கூழ் போன்ற திரவம்-Bone Marrow) போய்த் தங்கிவிடும்.

இப்படிப்பட்ட எம்பிரியானிக் ஸ்டெம் செல்களை எடுத்து, ஆராய்ச்சிக் கூடத்தில் வளர் ஊடக திரவத்தில் (polymer gel) வைத்து, பொருத்தமான ரசாயனத்தை அதற்கு ஊட்டி, 'நீ இதயமாக மாறு' என்றால், மாறும்! இப்படி கணையத்தில் இன்சுலின் உற்பத்தி செய்யும் பேங்கிரியாஸ் ஆக, குடலாக, விபத்தில் நரம்பு வெட்டுப்பட்டால், இழந்த நரம்பாக என்று உடல் உறுப்புகளாகவே வளர்த்து, நோயாளியின் தேவையை உணர்ந்து மாற்று அறுவை சிகிச்சை அல்லது ஸ்டெம் தெரபி சிகிச்சை அளிப்பதுதான் ரீஜெனரேட்டிவ் மெடிசன்.



• டாக்டர் ரவிச்சந்திரன்



# புரட்சி!



மனிதக் கருமுட்டைகளை வளர்த்து, எம்பிரியானிக் ஸ்டெம் செல்களை சிகிச்சைக்காக எடுப்பது இந்தியா உட்பட பல நாடுகளில் தடை செய்யப்பட்டுள்ளது. குறிப்பாக, கிறிஸ்தவ நாடுகளில், இதற்குக் கடுமையான தடை. எனவே எம்பிரியானிக் ஸ்டெம் செல்களை விட்டுவிட்டு, எலும்பு மஜ்ஜைகளில் தங்கியிருக்கும் அடல்ட் ஸ்டெம் செல்களை (Adult stem cells) தானமாகப் பெற்று, சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சையை முழுவதும் வெற்றிகரமாகச் செய்து வருகிறோம்.

ஒருவரின் எலும்பு மஜ்ஜையிலிருந்து ஸ்டெம் செல்களை மட்டும் தானமாகப் பெற 'ஸ்டெம் செல் செப்பரேட்டர்' என்ற இயந்திரத்தைப் பயன்படுத்துகிறோம். ரத்தப் புற்றுநோயால் பாதிக்கப்பட்டவர்களுக்கு ரத்த எலும்பு மஜ்ஜையைப் புதுப்பிக்க, ஸ்டெம் செல்களைச் செலுத்துகிறார்கள். தவிர ஆஞ்சியோபிளாஸ்டி செய்யும்போதும் ஸ்டெம் செல்ஸ் கொடுக்கிறார்கள்.

நெருங்கிய உறவு முறையினர் சிறுநீரக தானம் தந்தாலும், தானம் பெறுபவரின் நோய் எதிர்ப்புச் சக்தி காரணமாக பொருத்தப்பட்ட சிறுநீரகம் உடனடியாக நிராகரிக்கப்பட்டு விடுகிறது. இதை நிரந்தரமாகத் தடுத்து நிறுத்த, பிளாக்கிங் ஆன்ட்டிபாடிஸ் தன்மைகொண்ட அடல்ட் ஸ்டெம் செல்களைப் பயன்படுத்தலாம். இந்த முறையில் இருபத்து மூன்று சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சைகளை வெற்றிகரமாகச் செய்து முடித்திருக்கிறோம்" என்று சொல்லும் டாக்டர் ரவிச்சந்திரன், இதுதொடர்பான ஆராய்ச்சிக் கட்டுரையை செப்டம்பர் இருபத்தெட்டாம் தேதி அமெரிக்காவின் மின்னசோட்டா பல்கலைக்கழகத்தில் நடைபெறும் டிரான்ஸ்பிளாண்ட் மருத்துவ மாநாட்டில் சமர்ப்பிக்க இருக்கிறார்.

- ஸ்ரீசக்கரம்

# செல்போனுடன் ஒரு பகல்!

"எப்பா நல்லாக் கேட்டுக்கோ, நடுவுல இருக்குல்ல சிவப்பு பட்டனு, அதை ஒரு தடவை அமுக்குனா, உனக்கு வர்ற போனை நீ பேசலாம். 'ஹலோ'ன்னு சொல்லி ஆரம்பிக்கணும். பேசி முடிச்சிட்டு இன்னொரு தடவை அமுக்கினா, பேசறதை நிறுத்திக்கலாம்" தன் அப்பா கோயிந்சாமிக்கு சின்னப்பிள்ளைக்குச் சொல்லிக் கொடுப்பது போல் செல்போனை இயக்கச் சொல்லிக் கொடுத்தான் சிங்காரம். கொட்டாம்பட்டியிலிருந்து வந்து சென்னைவாசியான தன் மகனைப் பார்க்க, நேற்றுதான் வந்தார் கோயிந்சாமி. தன் மகன் தனக்காக வாங்கிக் கொடுத்த புது செல்போனை வைத்துக் கொண்டு, தனியாக ஒரு பகலில் கோயிந்சாமி அடிக்கும் கூத்தை 'எழுத்துத் திரையில்' காண்க!

(செல்போன் அடிக்கிறது. தன் குல தெய்வத்தை வேண்டிக்கொண்டு பவ்யமாக, பயபக்தியோடு பட்டனை அமுக்கிப் பேச ஆரம்பிக்கிறார் கோயிந்சாமி.)

**எதிர்முனை:** குட்மார்னிங் சார். வி ஆர் காலிங் ஃப்ரம் பிபிசிபி பேங்க்.

**கோயிந்சாமி:** 'ஹலோ' என் பையன் இப்படித்தான் ஆரம்பிக்கணும்னு சொன்னான், சொல்லிட்டேன்.

**எதிர்முனை:** ஹலோ சார், உங்களுக்கு அக்கௌண்ட் இருக்கா!

**கோயிந்சாமி:** தாயி... உனக்கு என்ன வேணும்? ஏதோ பேசுற. நிறுத்தி நிதானமாப் பேசு தாயி! ஜல்லிக்கட்டு காளை அத்துக் கிட்டுப் போறாப்ல பேசாத ஆத்தா!

**எதிர்முனை:** ஓ.கே. சார்.. உங்களுக்கு பேங்க் அக்கௌண்ட் இருக்கா?

**கோயிந்சாமி:** அந்த எலவுல்லாம் கெடையாது. எங்க ஊர்ல முருவன் கடையில டீக்குத்தான் அக்கவுண்ட் வைச்சிருக்கேன். அப்பப்ப வடையும் தின்பேன். ஆனா காசு குடுத்துருவேன்.

**எதிர்முனை:** எங்க பிபிசிபி பேங்க்ல உங்களுக்கு அக்கௌண்ட் ஆரம்பிக்கலாமா சார்? ஓப்பனிங் பேலன்ஸ் பத்தாயிரம்தான்!

**கோயிந்சாமி:** ஏ புள்ள! என்னக் கிறுக்குத்தனமா இருக்கு! என்னை ஆருன்னே தெரியாம, பத்தாயிரம் ரூவா எனக்குத் தர்றேன்னு சொல்லுறியே ஆத்தா! பட்டணத்துல இப்படி ஏமாளியா இருக்கியே! என்னமோ ஆத்தா, எனக்கு எதுவும் சரியாப் படல. நான் மறுபடியும் பொத்தானைத் தட்டி போனை வைக்கிறேன்!

(கோயிந்சாமி போனைக் கட் செய்ய, 10 நொடிகளில் அடுத்த அழைப்பு வருகிறது.)

**கோயிந்சாமி:** ஹலோ... ஹலோ.. ஹலோ...ஹலோ!

**எதிர்முனை:** சார், வி ஆர் காலிங் ஃப்ரம் சிசிட் கிரெடிட் கார்ட்ஸ்!

**கோயிந்சாமி:** ஆத்தா நீயும் இப்படித்தான் வவுத்தால போற மாதிரி 'கொடகொட'ன்னு பேசுவியா! பட்டணத்துல எல்லாரும் இப்படித்தான் பேசுவிக போல! ஆமா ஏதோ கார்டுன்னு காதுல விழுந்துச்சே, அது என்ன ஆத்தா?

**எதிர்முனை:** கிரெடிட் கார்டு சார்!

**கோயிந்சாமி:** ஓ... போஸ்ட்கார்டை பட்டணத்துல இப்படித்தான் கூப்பிடுவீகளா...?

**எதிர்முனை:** அது இல்லை சார். இது கிரெடிட் கார்டு.

**கோயிந்சாமி:** என்னை வெவரம் தெரியாதவன்னு நெனைக்காத தாயி! கார்டுன்னாலே அது போஸ்ட்கார்டுதான். நான் எம் மவனுக்கு எத்தனை தடவை போட்டுருக்கேன். நம்மூர்ல கணக்குப்புள்ளதான் நாஞ் சொல்லச் சொல்ல எழுதித் தருவாரு. எம் மவன் சொன்னான். இப்ப போஸ்ட் கார்டே தேவையில்ல. அதுல எழுதுறத இந்த ஜெல்போனுலேயே எழுதி அனுப்பலாமாமே! ஆமா தாயி, அப்ப ஸ்டாம்பை எங்க ஒட்டணும். படிச்ச புள்ளையாட்டம்

# கோயிந்சாமி கலாட்டா



பேசுற! உனக்கு வெவரம் தெரியுமா?

**எதிர்முனை:** இல்லீங்க சார். இது கிரெடிட் கார்டு. எங்க பேங்க்ல நீங்க வாங்கி, பர்ச்சேஸ் பண்ணிக்கலாம் சார்.

**கோயிந்சாமி:** புரியுறாப்ல தமிழ்ல சொல்லு ஆத்தா!

**எதிர்முனை:** தமிழ்ல... கடன் அட்டை சார்!

**கோயிந்சாமி:** ஏய்... யாரைப் பார்த்து கடன்காரன்னு சொல்லுற! ஊர்ல எனக்கு எவ்வளவு நஞ்சை, புஞ்சை இருக்குன்னு தெரியுமா! என்ன தைரியமிருந்தா, பல்லு மேல நாக்கைப் போட்டு கருமம் புடிச்சாப்ல என்னைக் கடன் வாங்கச் சொல்லுவ! நீ நல்லாயிருப்பியா! வெள்ளிக்கிழமையும், அதுவுமா பார்த்து கடன்காரி மாதிரி பேசுறியே! உன் நாக்கு அழுகிப் போக!

*(எதிர்முனை கட் ஆகிறது. கோயிந்சாமி போனைக் காதில் வைத்துக்கொண்டே)*

**கோயிந்சாமி:** ஏய்...ஏய்... என் கேள்விக்குப் பதிலைச் சொல்லுடி! இவ்ளோ நேரம் நல்லாப் பேசிட்டு இப்ப ஊமச்சி மாதிரி நடிக்காத!

*(அப்போது அடுத்த அழைப்பு வருகிறது. பதறியபடி காதிலிருந்து எடுத்த கோயிந்சாமி, குழம்பிப் போய் பட்டனை அவசரமாக அழுத்துகிறார்.)*

**எதிர்முனை:** சார் குட்மார்னிங். வீ ஆர் காலிங் ஃப்ரம் குட்டிபேங்க் ஹோம் லோன்ஸ்.

**கோயிந்சாமி:** (டென்ஷனாக) ஏய்... பொம்பள! குரலை மாத்திப் பேசுறியா! இங்கிலிபீசுல என்னைக் கெட்ட வார்த்தை போட்டுத் திட்டுறியா நீ! நான் பேச ஆரம்பிச்சா தாங்கமாட்ட நீ!

**எதிர்முனை:** (குழம்பிப் போய்) சார்... கூல்டௌன் சார்!

**கோயிந்சாமி:** (கோபமாக) ஆமா காலையில நான் கூழுதான் குடிப்பேன். இன்னிக்குத்தான் மவன் சொன்னான்னு எட்டு இட்லி தின்னேன். உனக்கெப்படித் தெரியும்! மிரட்டுறியா நீ!

**எதிர்முனை:** வாட்ஸ் ராங் வித் யூ! சார், வீடு கட்ட கடன் வேணுமான்னு கேட்க போன் பண்ணினேன்!

**கோயிந்சாமி:** (பிபி எகிற) யாரைப் பாத்து என்ன கேள்வி கேட்ட? வீட்டைச் சுத்தி கடன் வைச்சிட்டு ஒண்ணும் நான் ஊரை விட்டு ஓடி வரல! மவளே... என் கையில நீ சிக்குனே... (போன் கட் ஆகிறது)

*(மாலை வீடு திரும்புகிறான் சிங்காரம்)*

**சிங்காரம்:** அப்பா, செல்போனுக்கு என்ன ஆச்சு? ஏன் கிடைக்கவே மாட்டேங்குது?

**கோயிந்சாமி:** அதுவா... எவ எவனோ போன் பண்ணி என்னைக் கடன்காரன்னு சொல்லி வெறுப்பேத்திட்டிருந்தாங்க. அந்தக் கோவத்துல செல்போனோட வீட்டை விட்டு வெளிய போனேன். எவனோ ஒருத்தன் வழியில அந்தக் கருமத்தை என்கிட்ட இருந்து எடுத்துட்டுப் போயிட்டான். கிறுக்குப் பய! பாவம் அந்தக் கருமத்தை வைச்சிக்கிட்டு என்ன பாடுபடுறானோ! அதை நினைச்சாத்தான் துக்கமா இருக்கு!

*(சிங்காரத்துக்கு மயக்கம் வந்தது!)*

கற்பனை: முகில்

## சந்தாதாரர் ஸ்பெஷல்

அறுபத்துநான்கு ஆண்டுகளுக்கும் மேலாக ஒவ்வொரு தீபாவளியன்றும் கல்கி வாசகர்களின் இல்லங்களில் மகிழ்ச்சியை இரட்டிப்பாக்கி வருகிறது **கல்கி தீபாவளி மலர்.**

காரணம், ஓராண்டுச் சந்தா ரூ.390/- செலுத்தினால் ரூ. 90/- பெறுமானமுள்ள **கல்கி தீபாவளி மலர்** பரிசாக உங்கள் வீடு தேடி வரும்!

**கல்கி தீபாவளி மலர்** குறைந்த எண்ணிக்கையிலேயே சந்தாதாரருக்கு ஒதுக்கப்படுவதால், ஏமாற்றத்தைத் தவிர்க்க உடனடியாகச் செயல்படவும்.

# கல்கி தீபாவளி மலர் 2005

ஏற்கெனவே எமது நேரடி சந்தாதாரராக இருப்போரும் ஓராண்டுச் சந்தா அனுப்பி தங்கள் சந்தாவை மேலும் ஓராண்டு நீட்டிக்கச் செய்து, பரிசைப் பெறலாம். சந்தா எண்ணைத் தவறாமல் குறிப்பிடவும். முழு விலாசத்தையும் தெளிவாக எழுதவும்.

**முடிவு தேதி அக்டோபர் 20, 2005.** முடிவு தேதியை ஒத்திப்போட இயலாது.

'கல்கி' என்ற பெயருக்கு சந்தாத் தொகையை DD, MO அல்லது Cheque மூலம் அனுப்பலாம். வெளியூர் Cheque அனுப்புவோர் ரூ.20/- கூடுதலாக அனுப்பவும்.

***கல்கி சந்தாத் தொகை அனுப்ப வேண்டிய முகவரி:***

சர்க்குலேஷன் மேனேஜர்,
கல்கி காரியாலயம்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 032 போன்: 2225 1522, 22250623

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 356 / 03 - 05 * Registered as a Newspaper in Srilanka